

மலர் - 4 | ஹிஜ்ரீ 1362ஹு ரபீயுல் அவ்வல் கி.பி. 1943ஹு மார்ச்சுமீ | இ. - 5

## விஷய அட்டவணை



"நூருல் இஸ்லாம் ஆபீஸ்,"
65, பிராட்வே, ஜார்ஜ் டவுன், மதராஸ்.



بسم الله الرحمن الرحيم
نحمده ونصلي على رسوله الكريم




# நூருல் இஸ்லாம்

(ஓர் உயரிய செந்தமிழ் மாசிகை)

# NOOR-UL-ISLAM

(AN EXCELLENT TAMIL MONTHLY)

ஆசிரியர்: A. N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவீ)

மலர் - 6 | ஹிஜ்ரீ 1364ளு முஹர்ரம்மீ | இ - 2
கி. பி. 1944ளு டிஸம்பர்மீ


## குர்ஆன் - QURAN

### மாயிதா 5—ம் அத்தியாயம்

மதீனாவில் வெளியானது

120 வாக்கியங்கள்

அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்

ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! (நீவிர் செய்து கொள்ளும்) உடன்படிக்கைகளைப் பூர்த்தி செய்து வைப்பீர்களாக. உங்களுக்கு (பின்னே) எடுத்துக்காட்டுவதைத் தவிர (பொதுவாய்) நாற்கால் பிராணிகள் நுங்களுக்கு (அவற்றை உணவாய்க்கொள்ள) ஆகுமாக்கப் பட்டிருக்கிறது. மேலும் நீங்கள் (ஹஜ்ஜின் காலத்தில்) இஹ்ராம்கட்டிக்கொண்டிருக்கும் போது பிராணிகளை வேட்டையாடுவது கூடாது (எனத் தீர்மானித்துக்கொள்ள வேண்டும்). நிச்சயமாகவே அல்லாஹ் (மனிதர்களின் நன்மைக்காக) தான் நாடியதைக் கட்டளையாய்ப் பிறப்பிக்கிறான். (மாயிதா 5:1)

ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! அல்லாஹ் அடையாளங்களை (குறிப்பிட்ட வகைப்படி அல்லாஹ்வின் வணக்கத்துக்காக அடையாளமிடப்பட்ட மார்க்கங்களையும், (உயிர்ப் பிராணிகளையும்) நீவிர் அவமதிக்காதீர் (அதை வேட்டையாடாதீர்) பரிசுத்த மாதங்களையும் (துல்கஃதா, துல்ஹஜ், முஹர்ரம் மாதங்களையும்), குர்பானிக்கான உயிர்ப்பிராணியையும், (பரிசுத்த ஸ்தலத்தில் குர்பானி கொடுக்கப்படுவதற்காக) கழுத்தில் அடையாளமிடப் பட்டிருப்பதையும் (அவமதிக்காதீர்கள்; இவைகளையெல்லாம் உணவாய் உபயோகிக்கத் துணியாதீர்கள்) மேலும் தங்கள் இரட்சகன் பாலிருந்து திருப்தியையும் அருளையும் பெற்றுக்கொள்ளும் பொருட்டு சங்கையான வீட்டை (பைத்துல் ஹராமை) நாடி வருகிறவர்களையும் (நீங்கள் எவ்வகையாலும் தடை செய்யாதீர்கள்.) இன்னம் நீங்கள் (ஹஜ்ஜு உம்ராவணக்கக் காரியங்களையெல்லாம் முடித்துக்கொண்டு இஹ்ராமெனும் கோலத்தினின்றும்) வெளிப்பட்டு விடுவீர்களாயின் (மேலே கூறப்பட்ட உயிர்ப்பிராணிகளை) நீவிர் வேட்டையாடலாம் (தாராளமாய் உண்ணலாம்). உங்களை (பைத்துல்லாவுக்கு) சங்கையான ஆலயத்துக்குச் செல்லாமல் தடுத்துவிட்டவர்களான எந்த கூட்டத்தாரின் விரோதமும், நீங்கள் எல்லையைக் கடக்கும் வண்ணம் உங்களைப்

பாபியாய்ச் செய்யவேண்டாம், (ஆனால் நீவிர்) நன்மையின்மீதும் பரிசுத்த தன்மையின் மீதும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளுங்கள். (இதற்கு விரோதமாய்) நீங்கள் பாபத்தின்மீதும் வரம்புமீறுவதின் (அல்லாஹ்வின் கட்டளைகளுக்குட்படாமல் தாண்டிச் செல்வதின்) மீதும் உதவிசெய்து கொள்ளாதீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சி (அவனுடைய சட்டதிட்ட வரம்புகளுக்குக்கட்டுப்பட்டு) நடந்துகொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் வேதனை கொடுப்பதில் மிகவும் கடுமையானவன். (மாயிதா. 5:2)

(சாதாரணமாய் இயற்கைக்கொத்த விதமாய்) மரணமடைந்ததும், இரத்தமும், பன்றியின் மாமிசமும், அல்லாஹ் அல்லாதவர்களுக்காக (அல்லாஹ்வின் பெயரல்லாதவர்களுக்காக) அறுக்கப்பட்டதும் (அதன் மாமிசமும்), கழுத்தை நெறித்து உயிர் நீக்கப்பட்டதும், காலால் மிதித்து வைக்கப்பட்டு மரணமானதும், மேலே யிருந்து கீழே விழுந்து மரணமானதும், ஏதேனுமொரு மிருகத்தின் கொம்பினால் குத்திக் கொல்லப்பட்டதும், காட்டு மிருகங்கள் கொன்று தின்றதும் (இதன் மாமிசங்களெல்லாம்) உங்களுக்கு (தின்னவேண்டாமென) விலக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் (அவைகள் ஆகுமானதாயிருந்து, மரணமடைவதற்கு முன்) நீங்கள் அறுத்து விடுவீர்களாயின் பாதகமில்லை (அவற்றை தாராளமாய் நீங்கள் தின்னலாம்) நட்டப்பட்டதன்மீது (விக்ரஹ வணக்கக்காரர்கள்செய்வதேபோல்) அறுக்கப்பட்டதும், அம்பு முனையால் (தின்னக்கூடிய இவ்விறைச்சியை) நீங்கள் பங்குபோட்டு (ப்பறிமாறி)க்கொள்வதும் (தகாது). இங்ஙனம் செய்வது பாபக்கிரியையாம். நன்னம்பிக்கையற்ற அவர்கள் உங்கள் மார்க்கத்தைப்பற்றி (இனி நீங்கள் இஸ்லாம் மார்க்கத்தை விட்டுவிட்டு அவர்கள் கூறும் மார்க்கத்தைக் கடைப்பிடிக்கப் போவதில்லையென்று) இன்று நம்பிக்கையை இழந்துவிட்டார்கள். எனவே, (ஏ நன்னம்பிக்கைக் கொண்ட முஸ்லிம்காள்!) இனி அவர்களுக்கு நீவீர் (எவ்வகையானும்) அஞ்சவேண்டியதில்லை. மேலும் எனக்கே அஞ்சி நடப்பீர்களாக. இன்றைக்கு உங்களுடைய நன்மைக்காக உங்கள் மார்க்கத்தைப் பூர்த்தியாக்கிவிட்டேன்; இன்னம் (நான் உங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்றிருந்த) அருட்கொடையை சம்பூர்ணமாகச் செய்துவிட்டேன்; மேலும் உங்கள் நன்மைக்காக இஸ்லாமை (சாந்தி சுமாதான மார்க்கத்தை) உங்களுக்குரிய மார்க்கமாய் ஏற்றுக்கொண்டேன். எனினும் (பசியின் கொடுமையால்) ஒருவன் (இவைகளைத் தவிர்த்து வேறொன்றுமகப்படாமல்) திக்கற்ற நிலைமையில் சிக்கிக்கொள்ளுவானாயின் (தின்னலாம்.) ஆனால் வேண்டுமென்றே இவைகளைப் புசித்து) பாபத்தைப் புரியக்கூடாது. நிச்சயமாகவே அல்லாஹ் (நீங்கள் செய்யும் பாபங்களை அதிகம்) மன்னிப்பவனாக (அடியார்கள் பால் அதிக) அன்புடையோனாயிருக்கிறான். (மாயிதா. 5: 3)

---

## "நூருல் இஸ்லாம்"

விற்பனை ஏஜெண்டுகள்

1. A. L. M. ஸலீம்,
   58, இரண்டாம் குறுக்குத்தெரு,
   கொளும்பு.
2. T. S. A. ரசூல்,
   பாலக்கரை, திருச்சி.
3. K. M. ராஜா முஹம்மத்,
   B. P. M. முஹம்மதியாபுரம்,
   திண்டுக்கல்.
4. S. D. யூசுப்,
   53, ஜமீமா ஸ்டோர், ஹப்புத்தளை,
   ஸிலோன்.
5. S. நல்லதம்பி
   நியூஸ் ஏஜன்ட், கிராண்ட் பஜார்,
   மன்னார், ஸிலோன்.
6. S. M. ஜமால் மோஹிதீன்,
   ஹமீதா நியூஸ் ஸ்டால் மெயின் ஸ்டிரீட்,
   பந்தாரவிளை, ஸிலோன்.
7. N. சின்னையா,
   c/o P. A. ஹமீத் பந்தாவா, போல்காவிளை
   சிலோன்.
8. K. சாந்து முஹம்மது ராவுத்தர்,
   ஆண்டவர் ஸ்டோர்ஸ், நாயுடுபுரம்,
   கொடைக்கானல்.
9. M. N. S. அப்துல் மஜீத்,
   68, மெயின் ஸ்டிரீட், ராகவனு,
   ஸிலோன்.
10. முஹம்மத் தமீம் & கோ,
   13, 15, கண்டிரோட், கம்பளை, ஸிலோன்.

நமது ஸிலோன் ஏஜண்டு

ஜனாப் A. L. M. ஸலீம்,
58, இரண்டாம் குறுக்குத்தெரு, கொழும்பு.

வருடச் சந்தா : ரூ.
(சந்தா முன் பணம்)

# நூருல் இஸ்லாம்

## ஜின்னாஹ்—ஸாப்ரூ கடிதங்கள்

இன்று நம் முன் எதிர்பட்டு நிற்கும் முக்கிய பிரச்னை அரசியல் நெருக்கடியே. இஃது அகற்றப் படல் வேண்டு மென்பதே இந்திய மக்கள் கோட்பாடு. இதற் குரிய வழிகள் பலவற்றை நாட்டின் பல கட்சியார் வெளியிட் டுள்ளனர். பிரிட்டிஷார், கிரிப்ஸ் திட்டங்களை வெளியிட்டுள்ளனர்; காங்கிரஸ் ஐக்கிய இந்தியப் பூரண விடுதலை, தேசிய சர்க்கார் ஆகிய திட்டங்களை வெளியிட்டுள்ளது; முஸ்லிம் லீக் பாகிஸ்தானை வேண்டுகிறது; ஹிந்து மகாசபை அகண்ட ஹிந்துஸ்தான் கோருகிறது; இன்னும் பலப் பல கட்சிகள் பல திட்டங்களை வெளியிடுகின்றன. இவர்கள் ஒவ்வொருவரும் தம் கட்சித் திட்டமே தலைசிறந்த தெனக் கூறுகின்றனர். இதற்கு அவர்கள் காட்டும் ஆதாரங்கள்பல. இவற்றுள் உலகமக்களின் உள்ளங்களைக் கவர்ந்துள்ளது முஸ்லிம் லீக்கின் பாக்கிஸ்தான் திட்டமே எனக் கூறல் மிகையன்று.



காயிதே அஃலம் ஜனாப் எம். ஏ. ஜின்னாஹ்

மீக் கூறப்பட்ட திட்டங்கள் வெவ்வேறு வகையானவை யென்பதில் சந்தேக மில்லை. இதன் காரணமாக நாட்டின் அரசியல் நெருக்கடி அதிகரித்துக் கொண்டு போகுமே யன்றி, எவ்வாறுங் குறையா தென்பது உண்மை. ஆதலின், இவ் வெவ்வேறான கருத்துக்களை ஒன்று திரட்டி, ஒரே திட்டமாக உருவாக்கி, அதனைப் பிரிட்டிஷ்சர்க்கார் முன் சமர்ப்பிக்க ஸர் தேஜ் பகதூர் ஸாப்ரூ முற்பட்டுள்ளார். இவரது முயற்சி ஒரு நன்முயற்சியே; எனினும் அவருக்கோ, அல்லது அவர் தலைமை வகிக்கும் அநாமதேயக் கட்சிக்கோ இப்பணியை யாற்றும் திறனிருக்கிறதா, அவர்களின் முடிவு எவ்வாறிருக்கும் என்பன போன்ற சிலமுக்கிய விஷயங்களை சோதரர்களுக்குச் சுட்டிக் காட்ட விழைகிறோம். ஸர் ஸாப்ரூமுயற்சியின் முடிவு பற்றி நாம் கூறுமுன் அவர் அ. இ. முஸ்லிம் லீக் தலைவர் காயிதே அஃலம் ஜனாப் ஜின்னாஹ் அவர்களுக்கு விடுத்த அழைப்புகளையும், அதற்கு

ஜனுப் ஜின்னஹ் அளித்துள்ள பதிலையும் சோதரர்கள் கவனிக்க வேண்டுகிரும்.

ஜனுப் ஜின்னஹ்-ஸாப்ரூகடிதங்கள் வருமாறு:—

ஸர் ஸாப்ரூ கடிதம்

"முட்டுக் கட்டையைத் தீர்ப்பதற்கான வழிகளைப் பற்றிப் பரிசீலனை செய்வதே இக் கமிட்டியின் முக்கிய வேலை. இந்தியாவின் எதிர்கால அரசியலைப்பற்றி தலைவர்களை நேரில்சந்திப்பதன் மூலமும், இதர வழிகளாலும் பல வேறு கட்சிகளின் அபிப்பிராயமும் சேகரிக்கப் படும். பாகிஸ்தான் கோரிக்கையின் அந்தரார்த்தம் முழுமையையும் கமிட்டி பூரணமாக ஆலோசிக்கும். உதாரணமாக சமீபத்தில் நடந்த காந்தி—ஜின்னு சம்பாஷணைகளில் காந்திஜீயும், ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியாரும் சமர்ப்பித்த யோசனை பற்றியும் ஆலோசனை செய்யப்படும். ஹிந்து மகா சபை, சீக்கியர், தாழ்த்தப் பட்ட வகுப்பினர்; மற்ற முக்கியமான வகுப்பினர் அனைவருடைய கோரிக்கைகளும் ஜாக்கிரதையாகக் கவனிக்கப்படும். இவ்விதம் பல்வேறு எதிரெதிரான கருத்துக்களையும் ஆராய்ந்தபின், தற்போதைய விவாதங்களைத் தீர்க்க ஒரு வழி கண்டு பிடிப்பது சாத்தியம் என்று இக் கமிட்டி கருதுகிறது.

"ஆதலால், இவ் விஷயங்கள் பற்றிய விவரங்களை உங்களிடமிருந்து தெரிந்து கொள்ள நானும் கமிட்டியிலுள்ள மற்றும் ஓரிரு மெம்பர்களும் உங்களைச் சந்திக்க அனுமதிப்பீர்களா என்பதைக் கமிட்டியின் சார்பாகவும், என் சொந்த ஹோதாவிலும் நான் அறிய விரும்புகிறேன். நாங்கள் உங்களை எங்கு சந்திக்கலாம் என்பதையும், சந்திப்பதற்கு உங்களுக்கு சௌகரியமான இரண்டு தேதிகளையும் குறிப்பிடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்."—தேஜ் பகதூர் ஸாப்ரூ 10-12-44

ஜனுப் ஜின்னஹ்வின் பதில்

"கட்சிப் பற்றில்லாத அநாமதேயக் கட்சிமகநாட்டையோ, அதன் நிரந்தரக் கமிட்டியையோ நான் அங்கீகரிக்க முடியாதென்பதை வருத்தத்துடன் அறிவித்துக் கொள்ளுகிறேன். எனவே, இப் போதைய அரசியல் நிலைமையைக் கவனிக்கவோ, நீங்கள் மனதில் கொண்டுள்ள ஏற்பாட்டின்படி நடக்கவோ, அநாமதேயக் கட்சி மகாநாட்டின் நிரந்தரக் கமிட்டியில் சமீபத்தில் நியமித்துள்ளக் கமிட்டியை நான் அங்கீகரிப்பதற்கில்லை. தங்களின் கட்சிப் பற்றற்ற அநாமதேயக் கட்சி மகாநாட்டைப் பற்றி எனது அபிப்பிராயங்கள் பொது மக்களுக்கும், தங்களுக்கும் நன்கு தெரியும். எனவே, இப்பேர்ப்பட்ட நிலைமையில் தங்கள் கடிதத்தில் காணப்படும் வேண்டுகோளுக்கு நான் சம்மதிப்பதற்கில்லை.

"தங்களைத் தனி நபர் என்ற முறையில் அகௌரவமாக்கும் எண்ணம் எனக்கில்லை யென்பதை நீங்கள் உணருவீர்களென நம்புகிறேன். கட்சிப் பற்றில்லாதார் மகா நாட்டின் சார்பிலோ, அல்லது தங்கள்கடிதத்தில்பிரஸ்தாபிக்கப்பட்டுள்ள கமிட்டியின் சார்பிலோ இல்லாமல் சொந்த ஹோதாவில் என்னைச்சந்திக்க நீங்கள் விரும்பியிருந்தால் மகிழ்ச்சியுடன் தங்களைச்சந்தித்திருப்பேன்."-ஜின்னஹ் 14-12-44.

நெருக்கடி தீர்க்க அருகதை யுண்டா?

ஜனுப் ஜின்னஹ்வுக்கு அழைப்பு விடுத்த ஸர் ஸாப்ரூ, அரசியல் விஷயத்தில் நிலையில்லாக் கொள்கையுடையவர். அவர் இப்போது எல்லாக் கட்சியையும் சமரஸப் படுத்த அருகதை பெற்றவர் தானென்பதைக் காட்டிக் கொள்ள கட்சிப் பற்றில்லாதார் மகா நாட்டின் மறைவில் நின்று பேசுகிருர். ஆனல், உண்மையில் அவர் மிதவாதக் கட்சி அங்கத்தினர்களில் ஒருவர்; ஒரு சமயம் அதன் தலைவராயிருந்தவர். இதுபோலவே அநாமதேய மகா நாட்டினரின் கமிட்டி என்று கூறப்படும்

(56-ம் பக்கம் பார்க்க)



## ஆராய்ச்சி மேடை - VIEWS RESUME

வாழ்க ஜின்னஹ் !

அ. இ. முஸ்லிம் லீக் தலைவர் 'காயிதே அஃலம்' அவர்களின் 69வது பிறந்தநாள் இம்மாதம் 25உ திங்களன்று ஏற்படுகிறது. நாம் சென்ற "நூ.இ." இதழில் விடுத்த வேண்டுகோட்படி நாடெங்கும் உள்ள முஸ்லிம் பெருமக்கள் அவரது பிறந்த நாளைக் கொண்டாடுவரென்பதில் சந்தேகமில்லை.

இன்று முஸ்லிம்கள் தங்கள் பழந்தூக்கத்தைக் குறித்து வருந்தி, அரசியலில் மேன்மையுற்று விளங்குகிருர்களென்ருல், அதற்குக் காரணமாயிருந்தவர் ஜனுப் ஜின்னஹ் அவர்களே எனின் பொருந்தும். அவரது ஸ்தானத்தில் அவரன்றி வேறெவரேனுமிருந்திருப்பின், இதுகாறும் முஸ்லிம் சமுதாயம் பிறகட்சிகளால் ஏமாற்றப்பட்டு, அவைகளிடம் காட்டிக் கொடுக்கப்பட்டிருக்குமென நாம் நிச்சயமாகக் கூறுகிருேம். அத்தகைய பெரியாரின் பிறந்த நாளை உலக மக்கள் கொண்டாடி, அதுகாலை செய்யும் வாழ்த்துக் கோஷத்தில் நாமும் பங்குபெற விரும்புகிருேம். வாழ்க ஜின்னஹ்! அவரது ஆயுள் ஓங்குக! இதுதான் நம் ஆவல்.

ஆண்டவன் அவருக்கு தேகாரோக்கியம், ஆயுள் நீடிப்பு ஆகியவற்றை அளிப்பானுக"

வைஸிராயின் கோணல் பேச்சு

மே. த. வைஸிராய் வேவல் பிரபு, இம் மாதம் கல்கத்தா வர்த்தக சபையில் ஒரு பிரசங்கம் செய்தார். அப் பிரசங்கத்தைக் காணும்போது நமக்கு நகையூட்டக்கூடிய ஒரு கதைதான் ஞாபகத்துக்கு வருகிறது. ஒருவன் பலருக்குக் கடன்பட்டிருந்தான். அவனுக்கு நண்பன் வேருெருவன். இருவரும் சந்தித்தனர். முதல்வன் இரண்டாமவனுக்கும் சிறு தொகை கொடுக்க வேண்டும். கடனளி, தன் நண்பனிடம் கஷ்டங்கள் முறையிட்டு அழுதான். அதற்கு நண்பன் ஒரு யுக்தி கூறினன். சில நாட்கள் கழிந்தன. கடனளி தன்னிடம் வந்து கடன் திருப்பிக் கொடுக்குமாறு கேட்டவர்களுக்கெல்லாம் "பெப்பே" என்று கூறி வந்தான். கடனளியின் நண்பனும் வந்து தொகை கேட்டான். அவனுக்கும் அதே பதில் கிடைத்தது. "எனக்குமா இப் பதில்"? என்ருன் நண்பன். "ஆம், உனக்கும் பெப்பே — உங்கப்பனுக்கும் பெப்பே" என்ருன் கடனளி.

இது போன்று தான் மே.த. வைஸிராயின் பேச்சும் காணப்படுகிறது. இந்நாட்டில் உள்ள எல்லாக் கட்சியாரின் கோரிக்கைகளுக்கும் கைவிரித்துவிட்டார். இந்த செப்படி வித்தையை வைஸிராய்க்குக் கற்றுக்கொடுத்தது காங்கிரஸே. "இந்தியாவில் இரண்டு கட்சிகள்தான் இருக்கின்றன. ஒன்று காங்கிரஸ்; மற்ருென்று பிரிட்டிஷ். இதர எக்கட்சியும் செல்லாக் காசுகள்"—என்று பண்டித ஜவஹர்லால் முன்னொரு சமயம் கூறியிருப்பதை எவரும் மறந்துவிடவில்லை. அன்று இதரகட்சிகளுக்குக் கைவிரித்து விடுமாறு காங்கிரஸ் கூறிய வித்தையைப் பிரிட்டிஷார் தொடர்ந்து செய்து வருகின்றனர். அதே காங்கிரஸுக்கும் கைவிரிப்புதான். பிரிட்டிஷார் இவ்வாறு கூறுவதால், அவர்களின் ஏகாதிபத்திய அதிகாரம் இந்நாட்டில் நிலைபெற்று நிற்க ஹேதுவேற்படுகிறது. ஆதலால் வைஸிராயின் இக் கைவிரிப்பு கண்டு நாம் ஆச்சரியங்கொள்ளவில்லை.

அவரது பேச்சில் பொதிந்த இரண்டு விஷயங்கள் மட்டும் கோணல் தன்மை வாய்ந்தனவாக இருக்கின்றன. "பாகிஸ்தான் போன்ற பெரிய சஸ்திர சிகிச்சை இந்தியாவின் பிணிக்கு அவசியமில்லை" என்று வைஸிராய் கூறுகிருர். இங்கு வைஸிராய், 'டாக்டர்' ஆக நடிக்கிருர். ஸர் கிரீப்ஸ் திட்டத்தின் அடிப்படைக் கொள்கையே இந்தியாவை பல துண்டுகளாகப் பிரிப்பதுதானே. ஒருபுறம் கிரிப்ஸ் திட்டங்கள் ரத்தாகாமல் அப்படியே இருப்பதாகக் கூறிக்கொள்ளும் பிரிட்டிஷ் சர்க்கார், தங்கள் பிரதிநிதியான 'டாக்டர்' (?) மூலம் அதே சஸ்திர சிகிச்சை கூடாதெனக் கூறுகின்றனர். இது கோணல் பேச்சல்லவா? ஆதலால், நாம் 'டாக்டர்'ஆக நடிக்கும் வைஸிராய்க்கு கூறுவதெல்லாம் இதுதான்: 'டாக்டரே, உங்கள் பிணியை முதலில் போக்கிக்கொள்ளுங்கள்!'

இஃதன்றி வைஸிராய் நிர்வாக சபையில் இன்று அங்கம் வகிப்பவர்கள் தேசீயத் தன்மை வாய்ந்தவர்கள் என்று வைஸிராய் கூறுகிருர். அவர்களால் நடத்தப்படும் சர்க்கார் தேசீய சர்க்கார்தானும். இது முழுப் பூசணியைச் சோற்றில் மறைப்பதையொப்ப காணப்படுகிறது. தேசீய சர்க்கார் என்ருல் என்ன? தேசீயம் என்பதன் பொருள் யாது?

என்பனவற்றை வைஸிராய் சற்றும் கவனித்ததாகத் தெரியவில்லை. பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட, பொது மக்களின் ஆதரவு பெற்றவர்களைக் கொண்ட சர்க்காரே தேசீய சர்க்கார் எனப்படும். ஆனால், இது காலை வைஸிராய் சபையிலுள்ளோரனைவரும் அவரால் யதேச்சையாக நியமிக்கப் பட்டவர்களேயாவர். இந்த இலட்சணத்தில் அவர்கட்குத் தேசீயப் போர்வை கொஞ்சமும் பொருந்தாது. அனுதாவாளர்களைத் தேசியவாதிகளெனத் தட்டிக் கொடுக்கும் வைஸிராயின் பிரசங்கத்தால், இன்று நாட்டிலுள்ள சமூகப் பிளவு, வேறுபாடுகள் இன்னும் விரிந்து விடுமென்பது நிச்சயம். பிரிட்டிஷ் சர்க்கார், இவ்வகைப் பிரித்தாளும் கொள்கையைக் கைவிட்டு, மக்களின் கஷ்டங்கள் தீர வழி கோலுவதே அன்னார் தம் கடமையென்பதை அறிவித்துக் கொள்ளுகிறோம்.

## மக்கா மதீனு கஷ்ட நிவாரணம்:

புனித இஸ்லாம் மதம் தோன்றிய மக்கா, மதீனு நகர்கள் முஸ்லிம்களின் புனிதபூமியும், வணக்க ஸ்தலங்களுமாம். ஆதலின் அங்கு வதியும் மக்களுக்கு வறுமை முதலிய இடுக்கண் நேருங்கால் உதவி புரிய வேண்டுவது முஸ்லிம் உலகின் இன்றியமையாக் கடன். யுத்த காரணத்தாலும், உலக முஸ்லிம்களில் பெரும்பாலோர், தங்கள் மதக் கடமையாம் ஹஜ்ஜை நிறைவேற்ற இயலாமற் போய் விட்டதன் காரணத்தாலும் அராபிய நாட்டில் வறுமைப் பேய் தாண்டவமாடுகிறது. உணவின்மையால் அராபிய மக்கள் படும் அவதி சொல்லத்தரமன்று. இந்திய முஸ்லிம்கள் அவர்களுக்கு உணவு கிடைக்கும் வகையில் உதவி செய்யக் கடமைப் பட்டிருக்கின்றனர். இதற்கென சென்னையில் "மக்கா, மதீனு பஞ்சக் கஷ்ட நிவாரண நிதி" ஒன்றேற்படுத்தப் பட்டு, நிதி வசூலிக்கப் பட்டுவருகிறது. இந்திய முஸ்லிம்கள் இந்நிதிக்குத் தாராள பண உதவி தருமாறு வேண்டுகிறோம். நன்கொடைத் தொகைகள் : ஜனுப் எம். அப்துர் ரஹ்மான், பொக்கிஷதார், மக்கா மதீனு பஞ்சக் கஷ்டநிவாரண நிதி, (தோல் மண்டி) பெரிய மெட்டு, சென்னை—என்ற விலாசத்திற்கு அனுப்பப்பட்டால் போதுமானது. இந் நற் காரியத்திற்கு முஸ்லிம்கள் உதவி செய்ய முன் வருவார்களா?



# ஹஜ்ரத் அபூஷஹ்மா (ரலி)

சோதரர்!

கடந்த சிலமாதங்களாய், பாரூகெ அஃலம் ஹஜாத் உமர் கத்தாப் (ரலி) அவர்கள் குமாரர்களுள் ஒருவரான ஹஜாத் அபூஷஹ்மா விஷயமாய் ஒரு சில சாதக, பாதகமான விஷயங்களைப் பார்த்துவந்திருக்கிறீர்கள். மேலும், இதன் முடிவுதானென்ன என்று எம்மைப் பல நண்பர்கள் கடிதமூலமாகவும், நேரிலும் கேட்கவும் செய்கின்றனர். எனவே, இதன் முடிவு யாதென்பதைப் பின்னே காணும் ஒரு வினு விடை மூலம் விளக்கி முடிவு செய்துவிட விரும்புகிறோம். அதாவது :—

அகில இந்தியாவில்—என்?—உலகிலேயே சரித்திர ஆதாரமாய் விளங்கும் அல் உஸ்தாத் மௌலானு ஸைபத் ஸுலைமான் நத்வீ அவர்களுக்கு விடுக்கப் பட்ட வினு :—

"மௌலானு ஸைய்யித் ஸுலைமான் நத்வீ அவர்களுக்கு, அஸ்ஸலாமு அலைக்கும், ஹஜாத் உமர் கத்தாப் (ரலி) அவர்களுடைய நான்காவது குமாரரான ஹஜாத் அபூஷஹ்மா (ரலி) அவர்கள் வியபிசாரத் தண்டனை நிறைவேற்றப் படுவதற்கிடையே மரணமடைந்துவிட்டார்கள். அவர்கள் மரணமடைந்தபின்னர், அடிக்கவேண்டிய தண்டனை அடி பத்து பாக்கியாய் நின்றுவிட்டன. இத்தண்டனை அடி அவர்களுடைய கப்ரின்(புதைகுழியின்)மீது அடிக்கப்பட்டது என்று சொல்லும் இவ்விஷயம் உண்மையா, அல்லவா? உண்மையாயின், இதற்குரிய உண்மையான ஆதாரம் என்ன? அல்லது இது பிரபல்யமடைந்த ஒரு தவறுன விஷயம் எனக்கூறின், இத்தவறுதல் உண்டாவதற்கு மூலகாரணம் என்ன? இதை விளக்கி, சந்தேக நிவாரணமளிக்க வேண்டுமாய்ப் பணிவுடன் வேண்டுகிறேன்".

—இப்படிக்கி, அப்துல்லா.

சரித்திரப் பேராசிரியராம் மௌலானு நத்வீ அவர்களுடைய விடை.—

"மேற்குறிப்பிட்ட விஷயம் தவறுகும். இதில் நடந்த உண்மை என்னவெனில்; மிஸ்ரில் (எகிப்து தலைநகரில்) ஹஜாத் அபூஷஹ்மா, பேரீச்சரசத்தைப் பருகினுர்கள். எதிர்பாராவண்ணம் விலக்கப்பட்ட வகையில் அவர்களுக்கு மயக்கமுண்டாய்விட்டது. எனவே, ஹஜாத் அபூஷஹ்மா அதுசமயம் அங்கிருந்த கவர்னரிடம் வந்தார்கள். தகாத முறையில் தனக்குப் பானத்தின் காரணமாய் மயக்கமுண்டாயிற்று; ஆகையால் மார்க்க சட்டப்பிரகாரம் மது பானச் சட்டமுறைப்படி கசையடி தண்டனைத் தரவேண்டுமென்று வேண்டினுர்கள். அதற்கொப்ப தண்டனையும் நிறைவேற்றப்பட்டது, மிஸ்ரில் நின்றும் அவர்கள் திரும்ப சொந்த ஊர் வந்தடைந்ததும், ஹஜாத் உமர்கத்தாப்ரலி அவர்கள், இரண்டாம் முறையாக ஹஜாத் அபூஷஹ்மா அவர்களைத் தண்டிக்கக் கசையடி உத்திரவு செய்தார்கள். இது நிறைவேற்றப்பட்ட ஒரு மாதத்திற்குப் பின் ஹஜாத் அபூஷஹ்மா அவர்கள் வியாதியால் பீடிக்கப்பட்டு, மரணமுற்ருர்கள். பொதுமக்கள், (உண்மையையுணர்ந்துகொள்ள முடியாது) தண்டனையின் காரணமாய் அவர்கள் மரணமடைந்துவிட்டதாய் எங்கும் கூறிக்கொண்டிருக்கின்றனர். இது உண்மையல்ல."

ஸீரத் உமர்பின்கத்தாப் ஜௌஜீ மிஸ்ரீ. பக்கம் 238 பார்க்க.

ஸையித் ஸுலைமான்.

மேற்குறிப்பிட்ட வினுவும், விடையுமே எமது முடிவாகுமென்பதை வாசக நேயர்கள் கொள்ளவேண்டும். ஒரு சில பெரியார்கள் அப்படிக் கூறியிருக்கின்ருர்களேயெனக்கூறின் அதற்காக யாம் ஆச்சரியப்படவேண்டுவதில்லை. என்னெனில், இதுபோலவே, எண்ணற்ற எத்தனையோ உண்மைக்குமாறுன சரித்திரக் குறிப்புகள் சர்வ சாதாரணமாய் நமது முஸ்லிம் சோதரர்களுக்கிடையே புரண்டுகொண்டுதாமிருக்கின்றன. அது எவை என்பதுபற்றி நாம் இங்கு விவரித்துக்கொண்டிருக்க விரும்பவில்லை. ஆனால், ஆதாரமற்ற அதே முறையில்தான் இக்கதையும் பல தலைமுறையாய் புரண்டு வருகிறதென்பதுதான் எமது அபிப்பிராயம். உண்மையும் இதுதான். ஹஜ்ரத் அபூஷஹ்மாவின் விஷயம் இத்துடன் முடிவுற்றதாய் வாசக நேயர்கள் கொள்ளலாம்.

—ஹாபிஸ் (பாக்கவீ)

(52-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு கோஷ்டியின் நிலைமையும் இருக்கிறது. இக் கோஷ்டியார் அநாமதேய மகாநாட்டினால் நியமிக்கப்பட்டவர்களல்ல; ஸர் ஸாப்ரூவாலேயே நியமிக்கப்பட்டவர்கள். இவர்கள் ஒவ்வொருவரும் முஸ்லிம் லீக்கல்லாத இதர கட்சிகளில் அங்கம் வகிப்பவர்களே. இவர்களுக்கு மக்களின் ஆதரவு பல மில்லை. சுருங்கக் கூறுகிறோம். இவர்களனைவரும் முஸ்லிம் லீக்கின் பாகிஸ்தான் கோரிக்கைக்கு எதிர்ப்பான கருத்துடைய வர்களே. இவர்களிடம் முஸ்லிம் லீக் கோரிக்கைகள் சமர்ப்பிக்கப் படுமாயின் முஸ்லிம்களுக்குத் திருப்தி ஏற்படும் வகையில் முடிவு ஏற்படா தென்பதில் சந்தேக மில்லை. இதை யுணர்ந்தே ஜனாப் ஜின்னாஹ் அவர்கள், ஸர்ஸாப்ரு வின் அழைப்பை நிராகரித்து விட்டிருக்கிறார். ஸாப்ரூ கமிட்டியாரை அதன் ஆரம்ப நாள் முதலே ஜனாப் ஜின்னாஹ் வெறுத்து வந்தாரென்பதை உலகறியும். ஸர் ஸாப்ரூவும், தம் அழைப்பிற்கு ஜனாப் ஜின்னாஹ் என்ன பதிலளிப்பாரென்பதை நன்குக அறிவார். அவ்வாறிருந்தும் ஸர் ஸாப்ரூ ஜனாப் ஜின்னாஹ்வை அழைத்ததேன்?

**உலக மக்களை ஏமாற்றுந் தந்திரம்**

இந்திய அரசியல் தகராறுகளைத் தீர்த்து, விடுதலைப் பெறத் தாம் முயற்சித்ததாகவும், அதற்கு ஜனாப் ஜின்னாவிட மளிக்க மறுத்து விட்டாரென்றும் உலக மக்களுக்கு எடுத்துக் காட்ட ஸர் ஸாப்ரூ விரும்புகிறார். இந்திய விடுதலைக்குத் தடைக்கல்லாக ஜனாப் ஜின்னா குறுக்கிட்டாரென உலக மக்கள் நினைக்க வேண்டு மென்பதுதான் ஸர் ஸாப்ரூவின் தற்போதய தந்திரம். ஆனால், ஜனாப் ஜின்னா யார்? அவரது இலட்சியம் என்ன? ஜனாப் ஜின்னாவின் கோரிக்கை நியாயமா? ஸர் ஸாப்ரூ யார்? அவருக்கு நாட்டிலுள்ள ஆதரவு எவ்வளவு? அவரது இன்றைய முயற்சி நிறைவேறுமா? இவ் விஷயங்களெல்லாம் உலக அபிப்பிராயத்தில் புதிதல்ல. ஸர் ஸாப்ரூவால் உலகை ஏமாற்ற முடியா தென்பதை அவருக்கு எச்சரிக்க விரும்புகிறோம்.

## ஜின்னா நீடூழி வாழ்க!

('புல்புல்')

உலகம் புகழ் உத்தமன்
உன்ன தய மானவன்
உண்மை வீரம் சத்தியம்
ஊக்கம் யாவும் கொண்டவன்
இந்திய ஹிந்து முஸ்லீம்கள்
இன்ன லின்றி வாழவே
இன்னல் தோறும் வாதித்து
இனிய மார்க்கம் கண்டவன்
பொங்கும் புகழ் குன்றாமல்
புண்யன் ஜின்னா என்றுமே
வாழ்க மண்மிசை நீடூழி
வாழ்க, வாழ்க, வாழ்கவே!



# அலீகார் வைத்தியக் கல்லூரி நிதி

(By: ஸ்ரீவைகுண்டம் ஜனாப் வ. மி. ஷம்சுத்தீன்)

முஸ்லிம்களுக்காக ஒரு வைத்தியகல்லூரி இல்லாதகுறையை, ஸர் செயத் அஹ்மதுகான் அவர்களின் சீடர்கள் நிவர்த்திக்க முன்வந்து, அப்பல்கலைக்கழகத்தின் சார்பாக ஓர் வைத்தியக் கல்லூரியை நிறுவப் போகின்றனர். இந்தியாவிலும், இலங்கையிலு முள்ள முஸ்லிம்கள் இம் முயற்சியை வர வேற்கின்றனர். 29-10-44ல் வெளியான "டெக்கான் டைம்ஸ்" பத்திரிகையில் முஸ்லிம்களின் வைத்தியப் படிப்பைப்பற்றி ஓர் குறிப்புகாணப்படுகிறது. அதிலிருந்து முஸ்லிம்கள் வைத்தியப் படிப்பில் மிக மிக பிற்போக்காக யிருப்பதாகத் தெரிகிறது. இதற்குக் காரணம் முஸ்லிம்களுக்காகத் **தனி வைத்தியக் கல்லூரி இல்லாதது தான்.**

யுத்தகாரணமாக, இலங்கையிலும், இந்தியாவிலுமுள்ள முஸ்லிம்களில் பலர் நல்ல ஊதியத்தை அடைந்திருக்கின்றனர். அலீகார் வைத்தியக் கல்லூரிக்கு சேர்ந்திருக்கும் பணத்தைப் பார்த்தால் மிகவும் சொற்பம். தமிழ் ஜில்லாக்களில் மிகவும் குறைந்த பணந்தான் கிடைத்திருக்கிறது. **கலியாணம், காது குத்து, கத்னு,** ருதுசாந்தி, கந்தூரி, கூடு, கொடி, பஞ்சா, முதலிய வற்றிற்காகப் பணம் படைத்தவர்கள், தங்கள் பொருளை அள்ளிச் செலவழிக்கின்றனர். முஸ்லிம்களின் படிப்பிற்காக அவர்கள் செலவழிக்க முன்வருவதில்லை. ஆகவே தான் முஸ்லிம்கள் பிற்போக்காக யிருக்கின்றனர். கஸ்தூரி பாயின் நிதிக்கு கோடிக்கணக்கான பணம் சேர்ந்துவிட்டது. முஸ்லிம்களின் **கலாச்சார வளர்ச்சிக்கு இன்னும் ஒரு கோடி ரூபாய் சேரவில்லை.** அலீகார் வைத்தியக் கல்லூரிக்கு நிதி திரட்டும் பணியில் எல்லா முஸ்லீம் மாணவர்களும் பங்கு பற்றி தங்களால் கூடிய அளவு பணம் வசூலித்து அனுப்பவேண்டும்.

"ஸர் செய்யித் அஹ்மது கான் அவர்களைப் பற்றி நீங்கள் எழுதிய இரண்டு கட்டுரைகளையும் படித்தேன். "ஒவ்வொரு மாணவனுடைய மனதிலும் ஸர் செயித் பேசிக் கொண்டே யிருக்கின்றார்" என்று நீங்கள் எழுதியது முற்றுஞ்சரி. மாணவர்கள் எவரும் ஸர் செய்யிதை மறக்க முடியாது. தங்கள் மகன் ஜியாவுத்தீன், இஞ்சினீரிங் கல்லூரியில் படித்த போதிலும், அவனும் தங்களைப் போல் முஸ்லீம் ஜன சமூகத்துக்குத் தொண்டு செய்ய முன் வர நான் விரும்புகிறேன். அவன் "நூருல் இஸ்லாம்" பத்திரிகையில் எழுதிய "பாக்கிஸ்தான்" கவி, என்போன்ற மாணவர்களுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும்." என்று ஸாஹிராக் கல்லூரியில் படிக்கும் ஒரு இந்திய மாணவர் என்னிடம்சொன்னார்.

நான் மாணவர்களைப் பற்றி எழுதுவது என் மகனுக்கும் சேர்த்துத் தான். அவனும் ஒரு பள்ளிமாணவன் என்ற முறையில் அந்த உபதேசங்களைக் கடைப் பிடிக்கக் கடமைப் பட்டுள்ளான்.

மேற் கூறிய, உற்சாகமுள்ள மாணவர் சொல்கிறபடி எல்லா முஸ்லிம் மாணவர்களிடமும் ஸர் செயத் பேசிக் கொண்டே யிருப்பாராயின், எல்லா முஸ்லிம் மாணவர்களும் **அலீகார் வைத்தியக் கல்லூரி நிதிக்கும் பணம் திரட்டும் பணியில் ஈடு படுவார்களாக!**

"எவன் ஜன சமூகத்துக்கு நன்மை செய்கின்றானோ அவன் உங்களில் சிறந்தவன் என்று ரசூலே கரீம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். இவ்வரிய உபதேசத்தை ஒவ்வொரு முஸ்லிம் மாணவனும் மனதில் வைத்துக் கொள்ளவேண்டும்.

# "கமலா"

(By: கு. வே. ஜானகிராமன், B. A.)

அன்று எனக்கும் கமலாவிற்கும் பிரமாதமான சண்டை. சாதாரணமாக கமலா நல்ல பெண்தான். ஆனாலும் அன்று அவள் அவ்விதம் செய்திருக்கக்கூடாது. கோடைகாலம்; வெய்யிலோ பிரமாதமாக அடிக்கிறது. காலைமுதல் இரவுவரை ஆபீஸில் பிரமாதமான வேலை. எங்கள் மானேஜர் ஒரு "முசுடு" எடுத்ததற்கெல்லாம் "வெள், வெள்" ளென்று விழுவான். அவனிடம் நல்ல பெயர் வாங்குவது, மாமியாரிடம் நாட்டுப் பெண் நல்ல பெயர் வாங்குவதை விடக்கடினம். மாடு போல் உழைத்தாலும் மனிதன் கொஞ்சம் கூட சந்தோஷமடைய மாட்டான். அங்கும் அப்படித்தான். உக்ரமான வெய்யிலில் "கோட்டையும்" போட்டுக்கொண்டு ஆம். கோட்டை கழற்றினால்கூட மானேஜருக்கு கோபம் வந்துவிடும்—வியர்க்க விறுவிறுக்க வேலை செய்துகொண்டிருந்தேன். அன்று எப்படியாயினும் வேலையை சீக்கிரம் முடித்துக்கொண்டு சாயந்திரம் கமலாவை சினிமாவிற்கு அழைத்துக் கொண்டு போக வேண்டுமென்று பிளான் போட்டிருந்தேன். உண்மைதானே. ஒரு மனிதன் குமாஸ்தா வேலை செய்ய ஆரம்பித்தவுடன் மனைவியை மறந்துவிட வேண்டுமா என்ன? வந்தான் ஐயா மன்னன் மானேஜர் ஒரு கட்டுப் பேப்பரைத்தூக்கிக்கொண்டு. "மிஸ்டர் ராம்! இதோ இந்த பேபர்களை கவனித்து கொஞ்சம் "நோட்ஸ்" எடுத்து வையுங்கள். ரொம்ப அர்ஜெண்ட்".

"ஸார் இன்று வீட்டில் கொஞ்சம் வேலை இருக்கிறது. சீக்கிரமாக போக வேண்டும். நாளைக்கு......" என்று சொன்னேன் மென்று விழுங்கிக் கொண்டே. "நெவர்மைண்ட் மிஸ்டர் ராம் இதென்ன பிரமாதம் உங்களைப் போன்ற "யங் பீபிளுக்கு" மணி 3 தானே ஆகிறது. இரண்டே மணியில் முடிந்துவிடும்" என்று சொல்லிக்கொண்டே நழுவி விட்டான் மஹாது பாவன். "தாஜா, செய்கிறானாம், தாஜா. சுத்த இடியட்; இவனுக்கு மனைவி மக்கள் கிடையாதா" என்று முணு முணுத்துக்கொண்டே என் வேலையை ஆரம்பித்தேன்.

7½ மணி சமாருக்கு வீடு திரும்பினேன். அன்றும் கமலாவை ஏமாற்றியதற்காக வருந்தினேன். அவளுடன் எப்படிப் பேசுவது என்று எண்ணமிட்டுக் கொண்டே போனேன். எதிர்பார்த்தபடியே நடந்தது, கமலா மிகவும் கோபத்துடன் படபடவெனப் பேசினாள். மனைவியுடன் சற்று மகிழ்ச்சியுடன் பேசலாம் என்று எண்ணி வந்த எனக்கு அவளது நடத்தை ஏமாற்றத்தை யளித்தது.

"மனைவி, வீடு, வாசல் என்ற நினைவு இருந்தால் தானே எப்பொழுதும் ஆபீஸ், ஆபீஸ், ஆபீஸ் நல்ல ஆபீஸ், எல்லோரும் தான் வேலை செய்கிறார்கள். இதிலென்ன புதுமை......புடவையைப் பற்றிச் சொல்லி எத்தனையோ யுகங்கள் ஆகின்றன; வாங்கிக் கொடுக்கவேண்டும் என்று ஆசையிருந்தால் தானே ஞாபகமிருக்கும்" என்று அடுக்கிக் கொண்டே போனாள் கமலா. சோர்வுற்றிருந்த எனக்கும் கோபம் வந்தது.

"கமலா எப்பொழுதும் ஏன் தொந்தரவு செய்கிறாய்? எனக்கு எவ்வளவு களைப்பாயிருக்கிறது என்பதை சற்றேனும் யோசித்தாயா? ஸ்திரீகளாகிய நீங்கள் எல்லோருமே அப்படித்தான். புடவை வாங்கிக் கொடுத்தால் தான் அன்பு என்று அர்த்தமா?" என்றேன்.

கமலா தாழ்வுடன் என்னிடம், "நாதா நீங்கள் களைப்புற்றிருக்கிறீர்கள். சற்று இளைப்பாறுங்கள். கொஞ்சம் காப்பி கொண்டுவரட்டுமா," என்று கொஞ்சுவாள் என்று நினைத்தேன். நாவல்களில் ஒரு இலக்ஷிய ஸ்திரீ அப்படித்தானே செய்வாள்.

"உள்ளதைச் சொன்னால் ஏன் இவ்வளவு கோபம்? முடியாதென்று சொல்லி விடுவது தானே. போயும் போயும் உங்கள் வரிசைகளை யெல்லாம் என்னிடம் தானா காண்பிக்க வேண்டும்," என்று உரக்கப் பேசினாள் கமலா. என் கோபம் எல்லையும்



மீறியது. "மூடமே, 'எகனமிக்ஸ்' என்று கேள்விப்பட்டிருக்கிறாயா? 50 ரூபாய் சம்பாதிக்கும் ஒரு குமஸ்தாவின் மனைவி 30 ரூபாய் புடவை கேட்டால் குடும்பம் எப்படி நடக்கும்? படிப்பு இருந்தால் தானே விவேகமில்லாத கழுதை" என்று கத்திக் கொண்டே என் அறைக்குள் சென்று கதவுகளை சாத்திவிட்டேன். ஈஸிசேரில் சாய்ந்தேன். வெளியே கமலாவின் சப்தமே கேழ்க்கவில்லை. வெற்றியடைந்து விட்டதாக என் மனதில் அர்த்தமற்ற ஒரு அமைதி குடிகொண்டது.

ஒரு மணி நேரம் கழிந்திருக்கும். நிலவு வெளிச்சம் என் அறையில் ஜன்னலின் வழியாக பளிச்சென்று வீசியது. ஏண்டா கமலாவை கோபித்துக் கொண்டோம் என்று என்மனம் உறுத்திக்கொண்டிருந்தது. மெதுவாக என் அறையின் கதவுகளைத் திறந்தேன்; இருவர் பேசும் குரல் கேட்டது. எட்டிப் பார்த்தேன், நான் கடன் கொடுக்க வேண்டிய சௌகார் வந்திருந்தான். ஏழை என்றால் கடன் இல்லாமல் இருக்குமா? எனது எதிரியைக் கண்டதுபோல் பதுங்கினேன். கமலாவின் குரல் தான் கேட்டது. "அவர் தான் வீட்டில் இல்லை என்று சொன்னேனே இன்னும் இரண்டு நாட்களில் பாக்கியை கொடுத்து விடச் சொல்கிறேன். அதற்காகவா அவரை குறை கூறுகிறீர்கள் கொஞ்சம் கூட நன்றாகவேயில்லை அதுவும் என்னிடம்; வெட்கமாக இல்லையா?"—பிறகு நிசப்தம். என்ன இது! கமலாவா இவ்விதம் பேசுகிறாள்? ஆம் அவளுக்கு நிச்சயமாய் கோபம் தான். ஆனால் யார் மீது கோபம்? நிலா வொளியில் அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டே கேட்டேன் "கமலா! ஏன் பொய் சொன்னாய்?"

"பொய் சொல்லாமல் நிஜமே பேசிக் கொண்டிருந்தால் மனிதன் உலகில் வாழ முடியுமா? மேலும், அவன் உங்களைக் கண்டிருந்தால் சும்மா விட்டிருப்பானா? நீங்கள் களைப்புடன் இருந்தீர்கள். அப்பொழுது அவனை உள்ளே விட்டிருந்தால்... உனக்கு என் மீது ஏது இவ்வளவு அக்கறை?" என்று விஷமமாகக் கேட்டேன்.

அவள் கண்களை உயர்த்தி என்னை ஒரு முறை நோக்கினாள். என் கோபமெல்லாம் பறந்து விட்டது.

புடவை கேட்டாயே நாளைக்கு வாங்கிக் கொள்கிறாயா?

ஊஹூம் எனக்கு வேண்டாம் 50 ரூபாய் சம்பாதிக்கும் குமாஸ்தாவின் மனைவிக்கு அவ்வளவு உயர்ந்த புடவை எதற்காக? என்றாள் சாவதானமாக்

நான் சொன்னேனென்று கோபமா?

அப்படியெல்லாமில்லை அது தானே எகனமிக்ஸ்,' என்றாள் ஒரு விஷமச் சிரிப்புடன்

என் காதல் கட்டுக்கு மீறியது. அவளை அணைந்து கொண்டே கேட்டேன், "ஏன் கமலா, இவ்வளவு அன்பை வைத்துக் கொண்டு தானே சாயந்திரம் என்னுடன் சண்டையிட்டாய்."

அவள் பதில் பேசவேயில்லை. அந்த மௌனத்தில் தான் எவ்வளவு அர்த்தம்?

கீழே என் தாய் பாரதம் வாசித்துக் கொண்டிருந்தாள். "தருமபுத்திரர் பீமனைப் பார்த்து சொல்லுகிறார், "தம்பி பீமா, நமக்கும் துரியோதனனுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டால் நாம் ஐவரும், அவர்கள் நூறு பேருமாவர். ஆனால் நமது குலத்திற்கே ஒரு எதிரி வந்தால் நாம் நூற்றைந்து பேர் என்பதை மறக்காதே."

# திராவிடஸ்தான் இயக்கத்தில் முஸ்லிம்கள் சேரலாமா?

(By: " குலாம் ")

சென்றமாத நா.இ. இதழில் மதிப்புரை பெற்ற 'தமிழ் நாட்டு முஸ்லிம்கள் யார்?' என்ற பிரசுரத்தைப்பெறப்பெற்றுபார்த்ததின் பயனுக இதை எழுதி முஸ்லீம்களே எச்சரிக்க வேண்டியது அவசியமாயிற்று.

'முஸ்லிம்கள் திராவிடர்களே,' என்றதை ஆக்ஷேபிகக ஒன்று மில்லே; தமிழ் முஸ்லிம்களின் மூதாதையர், அனேவரும் இல்லேயென்ருலும், முக்காலே அரைக்காலே வீசம் பாகத்தினர் முஸ்லீமல்லாத வர்களாகவே இருந்தார்கள் என்ற உண்மையை இதுவரை யாரும் மறுத்தார்களில்லே. நான் 15-20 வருஷங்களுக்கு முன்னரே துலுக்கன் யார், என்ற தலேப்பின் கீழ் தாருல் இஸ்லாத்தில், நம் மூதாதையர் அனேவரும் ஹிந்துக்களே என்று எழுதியதை இதுவரை யாரும் மறுத்ததாக எனக்குத் தெரியவில்லே. ஆகையால் நாம் தமிழ் முஸ்லிம்கள் திராவிட முஸ்லிம்கள் தான் என்பதை அனேவரும் ஏற்றுக் கொள்ளவேண்டும்; ஏற்றுக் கொள்ளுகின்ருேம்.

ஆனல், இந்த காரணத்தால், நாம் திராவிடஸ்தான் இயக்கத்தில் பங் கெடுத்துக் கொள்ளத்தான் வேண்டுமென்று ஏற்படவில்லே. மதனி யார் கூற்றுப்படி, நம் இரத்தத்தில் திராவிட இரத்தம் ஓடும் காரணத்தால், நாம் திராவிடஸ்தான் இயக்கத்தில் மைதீன், பாஷா, ரஹிமான் சாஹிப்மார்கள் போல் ஈடுபட்டு, திராவிட இயக்க வீர சிப்பாய்களாக அணிவகுத்து தியாகம் செய்யக் கடமைப்பட்டிருக்கின்ருேமென்றேற்படுமானல், இந்திய முஸ்லிம்கள் ஆதியில் ஹிந்துக்கள் என்ற காரணத்தால், காந்தியார் கூற்றுப்படி ஹிந்துஸ்த்தான் இயக்கத்தில் ஈடுபடவேண்டும் என்று ஏற்படுகின்றது; பாக்கிஸ்தான் உரிமை கேட்பது அதர்மமாக முடிகின்றது; அல்லவா?

ஆகையால் முஸ்லிம் இளேஞர்களே! கொஞ்சம் நிதானித்து விஷயங்களே அலசிப் பார்க்கவேண்டுகின்றேன்! அவசரப்படக் கூடாது; நிதானம் எல்லாதானங்களே விடப் பிரதானமானது. பெரியார் ஈ. வெ. ரா. கோவில்களே இடிக்கவேண்டும், குளங்களே தூர்க்கவேண்டும், கம்பராமாயணத்தைக் கொளுத்தவேண்டும் என்பதிலிருந்தும், சு. ம. யற்றவர்களே சு. ம. உடனே அவசிய மானல் லுங்கியையும் தொப்பியையும் அணிந்து கொள்ளும்படி யோசனே கூறுவதிலிருந்தும், பாக்கிஸ்தானிகளே ஒட்டி காந்தியாரை எதிர்ப்பதிலிருந்தும், ஸவர்க்கார் மூஞ்ஜேக்களே ஆதரிக்காதிருப்பதிலிருந்தும்; அகண்ட ஹிந்துஸ்த்தான் இயக்கத்துக்கு மாருக, பாகிஸ்தானே ஒட்டி இந்திய பிரிவினேக்கு ஆதரவாக இருப்பதிலிருந்தும், இஸ்லாத்தையும், அதன் கர்த்தா இறுதி நபியவர்களே அவ்வப்பொழுது புகழ்வதிலிருந்தும், இளேஞர்களேத் தூண்டி விடக்கூடிய மேடைப் பேச்சு வன்மையிலிருந்தும் 'மதனி'யைப் போன்ற யௌவனர்கள் நிதானந் தப்பிக் குதித்தோட ஆரம்பித்திருக்கின்றனர். ஈ. வெ. ரா. பெரியாரைப் பின் பற்றினல், தான் தோன்றியாகக் கட்டு திட்டமின்றி, பயபக்தியின்றித் திரிந்து, நடந்து கொள்ள ஹேதுவாக இருப்பதைக் கண்டு, சில முஸ்லீம்கள் ஈ. வெ. ரா. வுக்கு 'பெகுபராக்' போட்டு வாலேப் பிடித்துக் கொண்டு திரியும் பொழுது, இவர்களுக்கும் 'ஜே' கிடைப்பதில் தலே வீக்கம் கண்டு பினுத்தித் திரிகின்றனர். இவர்கள் பெயரளவிலே முஸ்லீம்கள், உண்மையில் நாஸ்திகர்கள். இஸ்லாத்தின் எதிரிகள்—முனுபிக்குகள்—. இவர்களேப்பற்றி, "இந்த முஸ்லீம் பெயர் தாங்கிய எதிரிகளேப் பற்றி, சர்வ ஜாக்கிரதையாக முஸ்லீம்கள் இருந்து கொள்ள வேண்டும்"நிற்க எதற்காக ஹிந்துஸ்தானத்திலிருந்து பாக்கிஸ்தான் வேண்டு மென்கின்ருேமோ, அதே காரணத்துக்காக, நாம் திராவிட ஸ்தானத்திலும் பாக்கிஸ்தானிகளாகத் தான் இருக்க வழி தேடவேண்டும் என்பதை அடுத்து இன்ஷா அல்லாஹ் விளக்குகின்றேன். ஆரியர்கள்செய்த, செய்துவரும் அதர்மத்தைச்சகியாது, ஆரியர்களுக்குவிரோதமாகக் கிளம்பும் இயக்கம் என்ற காரணத்தால் தான் 'மதனி' சாஹிப் திராவிட இயக்கத்தை ஆதரிக்கத் துணிந்து விட்டார் என்று, அவர் தன் பிரசுரத்தில், ஆர்ய அதர்மத்தைப் பற்றி எழுதியுள்ள போக்கை



# ஒற்றுமைத் தூதர் உதய விழா

(By: எஸ். ஏ.)

"உலகத்தின் எந்த விதமான மாயா சக்தியும் அவரை மயக்கிவிட' முடியாது"

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி.

"அவர் ஒரு ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையின் தூதர்." —ஸ்ரீமதி சரோஜினி நாயுடு.

மஞ்சள் நிறக் கோட்டு சிவப்புக் கால் சட்டை தூய வெண்மை நிறக் காலர். நீல நிறத்தில் ட்டை ஏதாவதொரு வகை ஹாட். இம்மாதிரி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதம் 'டிப்டாப்'பாக அந்தக் காலத்தில் பள்ளிக்கூடத்தில் பத்து வயதில் காட்சியளித்தவர் முஹம்மதலீ ஜின்ன. இப்போது தான் என்ன? தசாவதாரக்கலரில் சூட்டும் கோட்டும் அணிவது இல்லேயே ஒழிய' உயர்ந்த ரகத்தில் கோட்டும் கால் சட்டையும் காலரும் ட்டையும் அணிந்து 'டிப்டாப்' பாகக் காட்சியளிப்பதில் யாருக்காவது சளேத்தாரா? அன்று பள்ளிக் கூடத்தில் எப்படி முதன்மையாக விளங்கினரோ அதே விதமாகத்தான் அலங்காரமாக உடுத்திக் கொள்வதிலும் முதன்மை ஸ்தானம். பேச்சிலும் நடை உடை பாவனேயிலும் அப்படித் தான். அவருடைய போக்கு யாருக்கும் பெருமையாகவே தோன்றும். விரோதியிடம் கூட பொருமை யுணர்ச்சி தென்படாது! அவ்வளவு சாந்த சற்குண மேதையாக விளங்கினர். அந்த நாளிலேயே அப்புறம் படித்துப் பட்டம் பெற்று பெரிய மனிதானர்; பம்பாயில் பிரபல வக்கீலாக விளங்கினர். ஏராளமான வருவாய். பொது வாழ்வில் பிரமாதமான பங்கு காங்கிரஸ் வட்டாரத்தில் ஒற்றுமைத் தூதர் (An Ambassador of Hindu Muslim nnity) என்னும் ஒப்பற்ற பெருமை வெறும் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு மட்டுமா அவர் பேர் பெற்ருர்? காங்கிரஸிற்குள்ளேயே அந்தக் காலத்தில் பெரும் பின்பு அதன் அங்கத்தினர்களுக்குள் பெரிய அபிப்பிராய பேதங்கள். அதனே யெல்லாம் சரிப்படுத்தி காங்கிரஸை ஒரு கண்ணியமான ஸ்தாபன மாக்கியவர் நமது ஜின்ன. அந்தக் காலத்தில் இவர் இன்னும் எப்படியெல்லாம் புகழப் பெற்ருர் தெரியுமா? **"பம்பாயின் பேச்சழகர் பிரபல வக்கீல் தாதாபாய் நௌரோஜியின் காரியதரிசி. கோபாலகிருஷ்ண கோகலேயின் சிஷ்யர்."** இப்படியெல்லாம் புகழ்ந்து பேசப்பட்டவர் இன்று அதே காங்கிரஸ்காரர்களால் எப்படியெல்லாம் இகழ்ந்து பேசப்படுகிருர்! என்னென்ன இழிமொழிகளால் பழிக்கப்படுகிருர்! இதுவும் காலக் கொடுமைதான்! எதுவாயிருப்பினும் மாணிக்கம் மாணிக்கமே. அது குப்பையில் கிடந்தாலும் கிரீடத்தில் இருந்தாலும் அதன் மெருகும் மேன்மையும் குன்றுமா? குறையுமா?

---

(60-ம் பக்கத் தொடர்ச்சி)

கவனித்தால் விளங்கும். இது, இப்போக்கு நிதான நிலேயைத் தவறி போவதாகும்; ஆபத்தான போக்காகும்.

அல்குப் பாரு லாஇஃதிபாரு என்றதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, மேற்கொண்டு ஜாக்கிரதையுடன் முஸ்லீம்களாய நாம் முன்னேறுவோமாக.

குறிப்பு:—பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் ஜின்ன ஸாஹிபைத்தாக்க ஆரம்பித்திருக்கும் விஷயமாக—பல முஸ்லீம்கள் எதிர்த்தும், சமாசம் ஆசிரியர்—'பாஷா' போன்ருர் ஆமோதித்தும் வருவதைப் பற்றி பாஷாவும் இதரர்களும் என் போக்கு என்ன என்று தெரிவிக்கும்படி கேட்டு சம்பந்தப்பட்ட பத்திரிகை இதழ்களே அனுப்பியிருக்கின்றனர். இன்ஷா அல்லாஹ். அது விஷயமாய் மறு இதழில் எழுதுவேன். நா. இ. ஆசிரியரும் இது விஷயமாய். நான் ஈ. வெ. ரா. பெரியாரைப்பற்றி சென்ற கட்டுரையில் குறித்திருப்பதை ஆக்ஷேபித்து குறிப்பெழுதி இருக்கின்ருர்கள். அதுபற்றியும் இன்ஷா 'அல்லாஹ் எழுதுவேன்.

### இவரைப்பற்றிச் சத்தியமூர்த்தி சொன்னது

காலஞ்சென்ற தேசபக்தர் ஸ்ரீமான் சத்தியமூர்த்தி ஜின்னாவைப்பற்றிப் பகிரங்கமாக ஒரு விஷயம் சொன்னார். அது சென்னையில் கோகலேஹாலில் நடந்த 'சட்டசபை நிகழ்ச்சிகள்' என்னும் தலைப்பில் பேசியது. "ஜனாப்ஜின்னாவுக்கும் எனக்கும் அரசியலில் எத்தனை வேற்றுமைகள் இருந்தாலும் உண்மையை ஒளிக்காமல் சொன்னால், நான் அறிந்த கண்ணிய புருஷர்களுள் ஜின்னாவும் ஒருவர். உலகத்திலுள்ள எந்தவிதமான மாயாசக்தியும் அவரை மயக்கிவிட முடியாது. (He is an incorruptible man in every respect) மனச்சாட்சியை மதித்து நடக்கும் மஹா பெரிய மனிதர்களுள் அவரும் ஒருவர்." இது விரோதியின் வாக்கு மூலம். ஸ்தோத்திரம்செய்து முஸ்லிம்களைச் சரிப்படுத்தும் நோக்கத்துடன் சொன்னதும் அல்ல. காங்கிரஸ் வட்டாரத்தில் பேசிய பேச்சு இந்த நற்சாட்சி சத்தியமூர்த்தியின் நாவிலிருந்து வந்தது. சில தேசீயவாதிகளுக்குக் கசப்பாகத்தான் இருக்கும். ஏன்? அவர் ஒரு பிரிட்டிஷ் ஏஜென்ட் என்று நாக்கில் நரம்பில்லாமல் பேசுகிறவர்களும் எழுதுகிறவர்களும் நமது தேசீயவாதிகள்! ஏதோ அந்தரங்க நோக்கத்துடன்—சுயநல எண்ணத்துடன் அவர் சுயராஜ்ய முட்டுக் கட்டை போடுகிறார் என்று பேசித் திரிகிறவர்களும் அந்த தேசாபிமானிகளே, அவர்களுடைய கருத்துக்குநேர் மாற்றமாக ஒரு தேசபக்த வீரசிங்கம் சத்தியமூர்த்தி ஜனாப் ஜின்னாவை வாயாரப் புகழ்வது என்றால், மற்ற தேசீயவாதிகளுக்கு எப்படியிருக்கும்? நாள் செல்லச்செல்ல ஜின்னாவை ஏசித்தூற்றும் தேசியவாதிகள் பெருகி வருகின்றனர். அவர்களின் ஏசல்மாலைகள் ஜின்னாவின் கழுத்தை அமுக்கி நெறிப்பதைக்காணச் சகியாமல் தானோ என்னவோ அந்த வீரசிங்கம் சத்தியமூர்த்தியும் அகாலத்தில் வயது பொன்றினார்!

ஜின்னாவின் அந்தரங்க சுத்தியை மறுக்க முடியாத இன்னும் எத்தனையோ தேசியவாதிகள் உளர். அவர்களின் உண்மையினாலாவது இந்திய தேசிய இயக்கம் ஓங்கி வளம்பெறுவதாக என்று வாழ்த்துவோமாக.

### ஜின்னா காட்டும் ஒற்றுமை வழி

ஜனாப்ஜின்னாவின் அந்தரங்க சுத்தியைக் காங்கிரஸ் தேசியவாதிகள் உணரட்டும் உணராமலே போகட்டும். அதைப்பற்றி அக்கரையில்லை. இந்திய முஸ்லமான்கள் அவரது அந்தரங்க சுத்தியைச் சந்தேகிக்காமல் இருந்தால்போதும். அதற்குச் சான்றாக முஸ்லிம் இந்தியா இன்று அவருடைய பாக்கிஸ்தான் கோரிக்கையில் ஒருமைக்குரல் கிளப்பி உலகெங்கும் சங்கநாதம் புரிகிறதென்பதை யாரேனும் மறுக்கமுடியுமா ?

"அந்தக்காலத்தில் ஜின்னாவிடம் தேசிய மணம் கமழ்ந்தது. ஒற்றுமையுணர்ச்சி பூத்துக் காய்த்துப் பழுத்துத் தொங்கிற்று. ஆனால் இன்று வேற்றுமையுணர்ச்சியும் விரோதப்பான்மையும் தோன்றி தேசீய ஒற்றுமைக்கு ஊறு விளைக்கிறது" என்று நமது தேசீயவாதிகள் கூறுகின்றனர். உண்மை என்ன? ஊன்றிக் கவனித்தால், அன்றிருந்த 'ஒற்றுமைத் தூதராகத்தான்' இன்றும் விளங்குகிறார். "தேசீய ஒற்றுமை, தேசீய ஒற்றுமை என்பது வெறும் கானல் நீர் வேட்டை. இந்தியாவிலுள்ள ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அகமும் புறமும் அடிப்படையில் ஆயிரம் வித்தியாசம் உடையவர்கள், இரு சமுகத்தினரும் தனித்தனி ஜாதியினர். எனவே முஸ்லிம்கள் தனித்துவாழ்வதையே விரும்புகின்றனர். அதற்காகத் தனிராஜ்யம் ஒன்றையும் பூரண சுதந்திரத்துடன் பெற விரும்புகின்றனர். இப்படியாக முஸ்லிம்கள் ஒரு பாகத்தில் பிரிந்து வாழ்வதுதான் இந்திய விடுதலைக்கு வழி" என்று ஜனாப்ஜின்னா திட்டமாகக் கூறிவிட்டார். இந்திய தேசீயத் தலைவர்கள் எல்லாம், இல்லாத ஒன்றை உண்டென நினைத்து இந்த 50 வருஷ காலமாகக் கானல் நீர்வேட்டை ஆடியதுபோதும். இனிமேலாவது ஸ்பஷ்டமாகத் தெரியக் கூடியஹிந்து—முஸ்லிம் பிரச்னையை உண்மையானது எனக்கருதி அதைத் தீர்ப்பதற்கு வழி தேடவேண்டும்; அதற்கு ஒரேவழி, உண்மையானவழி, உறுதியானவழி, சாத்தியமானவழி தேசப்பிரிவினை ஒன்றுதான், இந்த நாட்டைப் பாக்கிஸ்தான் என்றும் ஹிந்துஸ்தான் என்றும் இரண்டாகப் பிரித்துப் பூரண சுதந்திர ஜனநாயக ராஜ்யங்களாகச் செய்துவிடவேண்டும். இதுதான் பிரிட்டனின் பிடியிலிருந்து விடுபடுவதற்கு வழி. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, ஒற்றுமை என்று கூச்சல் போடுகிறவர்கள் இந்திய சுதந்திரத்தைத்தான் கருத்தில் கொண்டிருக்கின்றனர் என்பது தெளிவு. ஜனாப்ஜின்னா சொல்லும் பிரிவினையில் சுதந்திரம் கிடைப்பதாயிருந்தால் அவருடைய யோசனையை என் ஏற்கக்கூடாது? இல்லாத ஒன்றை உண்டென நம்பி மோசம்போவதற்கு ஜின்னா தயாராயில்லை, அரசியல் வாதிகள் உள்ளது உள்ளபடி ஒரு விஷயத்தைப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது ஹிந்து-முஸ்லிம் பிரச்னை ஒரு பெரிய பிரச்னையாகத்தான் தோன்றுகிறது. அந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்குப் பாக்கிஸ்தான் ஒன்றுதான் இறுதிவழி என்பது அரசியலில் ஆழ்ந்த அநுபவமும் தீர்க்க திருஷ்டியும் பெற்ற ஜனாப்ஜின்னாவின் திடமான நம்பிக்கை. இதில்தான் இந்தியாவின் விடுதலை சித்திக்கும், சாசுவதமாகும் என்றால், அதை ஒரு ஒற்றுமை முயற்சி என்று ஏன் சொல்லக் கூடாது? உள்ளுக்குள் ஆயிரம் பூசல்களை வைத்துக்கொண்டு ஒற்றுமை என்று கூவுவது நாணயமான செயலாகுமா? இல்லாத ஒன்றை உண்டென நம்புவது கண்மூடித் தனம் அல்லவா? இருக்கிறதை இருக்கிறதாகவே வைத்துக்கொண்டு அதனால் ஏற்படக்கூடிய சங்கடங்களை நிவர்த்திக்க வழி தேடுவதல்லவா அறிவுடையோர் செயல்? அந்த அறிவுடையோர் செயல்தான் ஜனாப் ஜின்னாவினுடையது! வெறும் பேச்சளவில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை வேண்டுமானால், அது எதற்காக வேண்டும்? தேசம் விடுதலை பெறத்தானே? அந்த விடுதலையானது வெறும் பேச்சளவாக நின்றுவிடக்கூடிய ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையே இல்லாமல் கிடைப்பதாயின், அதை நாம் ஏன் விரும்பலாகாது? அப்பேர்ப்பட்ட முயற்சியை ஒரு ஒற்றுமை முயற்சி, தேசவிடுதலை முயற்சி என்று ஏன் சொல்லக்கூடாது? கிளிப்பிள்ளை மாதிரி ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை என்று சொல்லிக் கொண்டிருந்தால் சுயராஜ்யம் கிடைத்துவிடுமா? அது கிடைக்கும் வழியையல்லவா பின்பற்றவேண்டும்? தேசப் பிரிவினையிலேதான் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையும் தேசவிடுதலையும் பின்னிக் கிடக்கிறதென்றால், அந்த அநுபவ பூர்வமான வழியை அரசியல் வாதிகள் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.



அரசியல் வாதியாகவும் அதே சமயத்தில் அஹிம்ஸா தத்துவ ஞானியாகவும் இருக்கும் மஹாத்மா வேண்டுமானால் அனுபவ பூர்வமான உண்மையை ஒப்புக்கொள்ள மறுக்கலாம். மற்ற அரசியல்வாதிகளும் மஹாத்மாவின் சிஷ்யர்களும்கூட வெவ்வேறு காரணத்துக்காக ஜனாப்ஜின்னாவின் யோசனையை ஏற்க மறுக்கலாம். அதனாலெல்லாம் ஜனாப் ஜின்னாவின் அந்தரங்க சுத்தியான தேச ஒற்றுமையும் அதன் முன்னேற்றமும் பொய்யென்று சொல்லமுடியுமா? தேசவிடுதலைக்குப் பலர் பலவித வழிகளைக் கூறினர். அவைகளுள் ஜனாப் ஜின்னாவினதும் ஒன்று. அவருடைய வழியை இந்திய முஸ்லிம் சமுதாயம் ஆதரிக்கிறது. அதனால்தான் காங்கிரஸ்வாதிகள் அதனை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. இது காங்கிரஸ்வாதிகளுக்கும் மற்றவர்களுக்கும் பிடிக்கவில்லை என்றால், 'ஒற்றுமைத்தூதர்' என்று ஒருகாலத்தில் புகழ்பெற்ற ஜனாப் ஜின்னா, இன்று அதற்கு நேர்மாற்றமானவராகக் கொள்ளப்படுவது என்ன நியாயமோ எனக்குப் புரியவில்லை!

### வாழ்க நம் ஒற்றுமைத் தூதர் !

வயது ஏறிவிட்டது என்னவோ உண்மை. ஆனால் அறிவு மயங்கவில்லை. அனுபவம் குறையவில்லை. வாய்மை குன்றவில்லை. தூய்மை போகவில்லை. தேசபக்தி என்னும் தீ கொழுந்துவிட்டெரிகிறது. அதன் சுடர் ஒளியின் வேகம் இந்த நாட்டை அடிமை கொண்ட அந்நியரின் கண்களைக் கூசச் செய்கிறது! ஒற்றுமைத் தூதர் வாழ்க! வாழ்க!!

(குறிப்பு :-ஸர் சாப்ருவின் கட்சிப் பற்றற்ற சமரச முயற்சியிலும் தான் கலந்துகொள்ள முடியாது என்று சமீபத்தில் ஜனாப் ஜின்னாஹ் கூறியதையும் கவனிக்கவேண்டும். நூ. இ. ப.-ர்.)

# "கமாலின் கல்யாணம்"

(By: நம்புதாளை P. V. A. ஷாஹுல் ஹமீது.)

ஆயாகுளத்தின் மாஞ்சோலைக்கு மாலை நான்கு மணிக்கெல்லாம் வந்து விடுவான் கமால். அன்றொருநாள் மட்டும் 5-30 மணிக்கு "மாலை தபால்" என்ற பத்திரிகையுடன் வந்தவன் பதினொருவது பெஞ்சியிலமர்ந்து வாசித்துக்கொண்டிருந்தான்.

அவ்வமயம் ஓர் கெடியாரக்கை நறுமணம் தெளித்த கைகுட்டையுடன் கமாலின் இரு கண்களையும் விளையாட்டாக கட்டியது. ஜுனைத்! என்று கையை தொட்டுத் தழுவினான். உண்மையில் அவன்தான் ஜுனைத். குஷியாக கைகுலுக்கி சம்பாஷித்தார்கள்.

அதன்பின் பத்திரிக்கையின் சினிமா பகுதியில் ஜெமினி டாக்கீஸாரின் புத்தம் புதிய படம் "பரீதா (அல்லது) பெண்கள் நாயகம்" என்று வெளிவரப்போவதையும் அதன் நடிகர்களை பற்றியும், நீளமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஆயாகுளத்தின் நடுவே நான்கு குழாய்கள் மாட்டிய "ரேடியோ" கம்பத்தில் அன்றைய மாலைச் செய்திகளும், M. S. சுப்புலக்ஷ்மி அவர்கள் தோத்திர பாடல்களும் கேட்பதற்கிருந்தது. சூரியன் மறைந்ததும் குளத்தின் நான்கு புறங்களிலும் மின்சார விளக்குகள் பகலாய் எரிந்துகொண்டிருந்தன.

ஜலம் கொண்டு செல்ல வரும் இளங்குமரிகள் செம்புகளையும், செப்பு குடங்களையும், விளக்கி ஜலம்கொண்டு செல்வதே அலாதியான காட்சியாக இருந்தது.

"பெஞ்சியோரத்தில் நீண்ட வெள்ளை ரோஜாவை கெல்லி முகர்ந்துகொண்டே போகலாமா கமால்"? என்றான் ஜுனைத்.





அதற்குள் குளக்கரையில் ஆபத்து! ஆபத்து!! ஆபத்து!!! என்ற அபய குரல்கள் கிளம்பின. அருகிலமர்ந்திருந்த, கமாலும், ஜுனைதும், நொடிக்குள் சென்று கவனித்தனர். பால் வடியும் முகம்போல் அழகிய ஒரு மங்கை குளத்தில் ஆழம் பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தோ பாவம்! என்றதும் கமால் துள்ளிக் குதித்து மிதந்த கூந்தலை அள்ளி பிடித்து கரை கொண்டுவந்தான். ஆண்டவனருளால் உயிர் தப்பினாள்! என்றாலும் பேச முடியவில்லை.

குமரி காப்புக்கான சங்கத்தின் தலைவி "பரீதா"வுக்கு டெலிபோனில் விஷயம் எட்டியதும் சங்கத்தின் காரை இமைபொழுதில் அனுப்பினார்கள். அந்த மங்கையை கமால் கவனமாக காரில் ஏற்றி துணைப்பெண்ணுடன் சங்கத்திற்கு கொண்டு போய்விட்டான். தொண்டர்பெண்கள் துணிகளை மாற்றி மாற்றுடை அணிவித்தார்கள். அவ்வமயம் கண்ணாடி போத்தலில் கடிதம் ஒன்றடைத்து மடியில் சொருகி இருந்ததை கண்டெடுத்தார்கள். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது.

### "கடிதம்"

மஹா ஜனங்களே! அதிகாரிகளே!! என் பெயர் "ரஸீனா" எனக்கு வயது 16 தான் ஆகிறது. "தொண்டி"பல்கலை கழகத்தில் படித்தேன். என் படிப்பு முற்றுப் பெறுவதற்குள் என் ஆகம தர்மப்படி பர்தா முறைக்குள் சென்றுவிட்டேன். அன்று 9 வயது நிறைந்திருக்கலாம். என் பதினொராவது வயதில் பூப்படைந்தேன். 12ம் வயதில் நிச்சியார்த்தமும், கல்யாணமும் சேர்ந்தாப்போல் நடந்தது. மதி தெரிந்ததுமுதல் மணமாகும் வரை என் பெற்றோர்கள் கரும்கபாகவே என்னை வைத்திருந்தார்கள்.

என் மணமகன் எனக்கு கல்யாணமாகும் வரை தெரியாது. அன்று மறுநாள் என் மணாளரை நாணமில்லாமல் பார்க்க எண்ணினேன். ஏன்? பார்த்தேன்! பயந்தேன்!! இல்லை நிதானமாக கவனித்தேன்!!! ஆனால் என் தந்தைக்கும் (கிழம்) அதிகமான வயதையுடையவர் தலையில் வெள்ளி ரோமங்கள், வீங்கிய வயிறு, ஏன்? எல்லா அவலக்ஷணங்களும் நல்லாயிருந்தன.

இதைகண்ட நான் என் தாயிடத்தில் அம்மா! என்று அழைத்து அடுத்தவீட்டு "ஜமீலா"வின் கணவன்போல் எனக்கும் ஓர் புருஷன் இல்லையா? என் இளமையில் "பாட்டி" என்றழைக்க, என்ன தவம் செய்தீர்கள்? தாயே! என்றேன். அதற்கு என் தாய்; கண்ணே! என்ன பிதற்றுகிறாய்? உன் பாக்கியமே பாக்கியம்! உன் பக்கத்திற்குப் போனாலல்லவோ உன் புருஷன் மகிமை புரியும். வைரநகை! மாடிவீடு! வண்டி! பல்லக்கு! ஆடு, மாடு! தே, மா, பலா, தோப்பு, இன்னும் என்ன வேண்டும்? போகப்போக தெரியுமடி கண்ணே! என்றாள் என்தாய்.

இன்னும் ஒரு முழக்கயிறும், ஒரு பாழுங்கிணறும், இருப்பதாகச் சொல்ல மறந்துவிட்டீர்களே என்றேன். அதற்குள் என்னை மதலை பருவத்தில் தாலாட்டியதைபோல சில பாட்டுகள் பாடினாள். ஆனால் அது என் காதில் நுழைய இடமில்லை.

கடைசியாக ஓர் வார்த்தை; "வாழ்ந்தால் ஒரு யுவன்கூட வாழ்வேன் இன்றேல் மாள்வேன்" என்று மட்டும் சொன்னேன். கடந்த நான்கு வருடங்களாக என்னை புக்ககத்துக்கு கொண்டுபோக எத்தனையோ தந்திரங்கள் செய்தார்கள். ஆனால் என் விஷயத்தில் அது பலிக்கவில்லை.

இன்று பலாத்காரமாக கூட்டிச்செல்ல வந்த பெண் பட்டாளங்களை பார்த்த நான் பத்திரமாக ஆயா குளத்திற்குபலியாகினேன். இப்படிக்கு "ரஸீனா."

என்று இவ்வாறு எழுதியிருந்ததை சங்க மண்டபத்தில் கூடியிருந்தவர்கள் விளங்க "பரீதா" வாசித்தாள். அதற்குள் மூர்ச்சை தெளிந்த "ரஸீனா!" கண்ணை திறந்தாள். கமாலை கண்டாள். அவள் சங்க மண்டபத்தை ஸ்வர்க்கமாக எண்ணினாள். ஏன் "என் காதலா!" என்றே அழைத்துவிட்டாள்.

தலைவி "பரீதா" இருவரின் உள்ளக் கிடக்கையை அளந்துபார்த்து நல்ல முறையில் விவாகபந்தத்திலிருந்து நீக்கம் செய்து இஸ்லாமிய தர்மப்படி மறுமணம் செய்தார்கள். 'கமாலுக்கும் ரஸீனாவுக்கும், சங்க மண்டபத்திலேயே திருமணம் நடந்தது. ஜுனைத் ஓர் மங்கள கீதமும் பாடினான் சுபம்.

குமரிகாப்பு சங்கமும், தம்பதிகளும் நீடூழி வாழ்க!

கமால் கண்ணிறைந்த கட்டழகன்!
பள்ளித் தோழன்; மாமி மகன்!
ஆனால் ஏழை..................

---

# ஸ்னேகனின் தியாகம்

(By: M. K. E. மௌலானா, கீழக்கரை.)

உலகமெனும் ஆழிய கடலில், வாழ்க்கைத் தோணியில் வெகுதூரம் பிரயாணம் செய்து, கடைசியாக ஒரு துறையைக் கண்டுபிடித்தவர் போலவும், பலதினங்களாக பெரும் வீரர்களுடன் கொடுஞ்சமர் பல புரிந்து, வெற்றிமாலை சூடி அலுத்துப் போய் வந்த காரணத்தால், பெரும்புயலுக்குப் பிறகு நிலவும் ஏகாந்தமான அமைதியையொத்த தோற்றத்துடனும், கெம்பீரமான முகக்களையோடு, எளிய ஆடையாபரணங்களையணிந்தவராய், அழகிய மயிலாசனத்தின்மீது அமர்ந்திருந்தார் மொகல் மன்னர் ஔரங்கஜீப் பாதுஷா.

குற்றவாளிகள் ஒவ்வொருவராக நீதிவழங்கும்பொருட்டு பாதுஷாவின்முன் கொணர்ந்து நிறுத்தப்பட்டனர். பட்டணத்துப் பொது ஜனங்களும் தத்தம் குறைகளைத் தெரிவிக்க அனுமதிக்கப்பட்டனர். குற்றவாளிகளுக்கும் அவரவர் குற்றத்திற்குத் தக்கவாறு தண்டனைகள் அளிக்கப்பட்டன. கடைசியாக அரசாங்க கஜானாவில் கொள்ளையடித்தான் என்ற காரணத்துடன் இருபத்துநான்கு வயது மதிக்கத்தக்க ஒரு இளம் வாலிபனும் கொணர்ந்து நிறுத்தப்பட்டான். முன்னவர்களைப்போலவே இவனையும் விசாரித்து நீதிவழங்கத் தொடங்கினார், நீதிவழுவாது செங்கோலோச்சும் மன்னர் ஔரங்கஜீப் பாதுஷா.

பாதுஷா:—அமீனுல்லா: அரசாங்க கஜானாவிலிருந்து பத்தாயிரம் மொஹராக்களைத் திருடியதாக நீ குற்றம் சாட்டப்பட்டிருக்கிறாயே, அதை நீ ஒப்புக்கொள்கிறாயல்லவா?

கைதி வாய்திறக்கவில்லை. ஆனால் தலையை மட்டும் அசைத்தான்; 'ஆம்' என்பதன் அறிகுறியாக.

பாதுஷா:—அப்படியானால் நம் அரசாங்கத்தில் திருடிய ஒருவனுக்கு என்ன தண்டனை கிடைக்குமென்பதை நீ அறிவாயல்லவா?

கைதி:—ஆம் அறிவேன்.

பாதுஷா;—ஆகவே நீ செய்திருக்கும் குற்றத்திற்கு உனக்கு என்ன தண்டனை கொடுத்தல் தகும்?

கைதி:—பாதுஷாவின் ஆக்கினைப்படி நடக்க சித்தமாயிருக்கிறேன்.

பாதுஷா:—பிரதானிகளே! நம்மிடம் உண்மையானவனைப்போல் இருந்து நமது கஜானாவிலேயே திருடிய ஒருவனது குற்றம் மகா பாரதூரமானது. ஆகவே அதற்குத் தகுந்த தண்டனையே ஒழிய வேறில்லை. இதில் உங்கள் அபிப்பிராயமென்ன?

பாதுஷாவின் தீர்மானம் நீதியுள்ளதாயிருக்குமென்பதே எங்கள் முடிவு.

பாதுஷா;...என்றாலும் அமீனுல்லாவிடம் நாம் கருணைகாட்டி மரணதண்டனையளிக்காமல் பத்து வருஷம் சிறைவாசத்தை யனுபவிக்க தண்டிக்கிறோம்.

சபை கலையலாம்.

அன்று பௌர்ணமி. பால்போல் நிலா வீசிக்கொண்டிருக்கிறது. எங்கு நோக்கினும் இயற்கையழகுகள் கொள்ளாக்காட்சியாயிருக்கிறது. குடும்ப கஷ்டத்திலோ, அல்லது வேறெந்தக் கஷ்டத்தினாலாவது அல்லற்படும் எவனானாலும் அந்த அழகு சௌந்தர்யமான இயற்கையன்னையின் ரூபலாவண்யம் பொருந்திய அழகே உருவாயமைந்த அந்த இயற்கை வனத்தை சற்றுநேரமாவது காணுவானாயின் தன்கஷ்டத்தை மறந்து ஒருபத்து பாட்டாவது இயற்கை அன்னையின் அழகுக்கு அர்ச்சனை செய்யாமல் நகரமாட்டான். அந்த வனத்தின் ஒரு கோடியில்தான் மொகல் மன்னர்களின் சிறைக்கூடமும் அமைக்கப்பட்டிருந்தது. கைதிகள் தனிமையில் ஏங்கிக்கிடக்கும் சமயங்களில் இந்த இயற்கையழகில் ஈடுபட்டாவது சற்றுநேரம் தங்கள் கவலைகளை மறந்திருக்கட்டும் என்னும் காரணத்தால் தானோ என்னவோ மொகலாய மன்னர் சிறைகூடம் கட்ட அவ்விடத்தைக் கண்டுபிடித்தது.

அவ்வியற்கையழகிலேயே ஈடுபட்டு தன்னை மறந்து அதிலேயே லயித்துப்போய் ஜெயில் கம்பங்களைப் பிடித்துக்கொண்டு நின்றான் ஒரு கைதி. அவன் முகத்தில் புன்னகை பூத்து அவன் வாயிலிருந்து இரண்டொரு வார்த்தைகளும் வெளிவந்தன. ஆம்



இதுவரை ஜயபாலன் விஜயாவுடன் கொஞ்சிக் குலாவிக்கொண்டு சந்தோஷமாக காலங் கழிப்பான். அதுதானே எனது இலட்சியமும்; அதற்காக நான் பத்து வருஷமல்ல பத்து யுகங்கள் வேண்டுமானாலும் சிறைவாசத்தையனுபவிக்கத் தயார். இவைகள்தான் அக்கைதியின் வாயிலிருந்து வெளியான சொற்கள். அவன் மனம் பழைய காலத்தை நாடிச் சென்றது. அதில்தான் எவ்வளவு இன்பத்தைக் கண்டான் அவன்.

இரண்டு வருஷங்கள் அவன் மனக்கண்முன் ஒரு விநாடியில் ஓடி மறைந்தது.

சத்தியத்தையுணராமல் சண்டித்தனமான மௌட்டிகக் கொள்கையில் மூழ்கிப்போயிருந்த மக்களுக்கு, சத்தியத்தின் புனித பொக்கிஷமான இஸ்லாத்தை, தனது போதனா வழியாலும், அபாரமான பிரசார சக்தியாலும் சீர்திருத்திக்கொண்டிருந்தார் மன்னர் ஔரங்கசீப். அநேகஹிந்துக்களும், பிறஜாதியினரும் சக்ரவர்த்தியின் சாமாரியான ஞானோபதேசங்களைக் கேட்டு சத்தியத்தைக் கடைப்பிடித்து இஸ்லாத்தைத் தழுவினர். இன்னுமனேகர் அனாச்சார மௌட்டிகக் கொள்கைகளைக் கைவிட்டதுடன் உண்மையை ஒப்புக்கொள்ளலாயினர். அவ்வாறு திரும்பிய தங்கள் சமூகத்தவரை ஹிம்சிக்கத் துணிந்தவர்கள் தண்டிக்கப்பட்டனர். திருடர்களின் கரங்கள் துண்டிக்கப்பட்டன. கொலையாளி பழிவாங்கப்பட்டான். மக்களிலே ஒரு குழுவினரை சண்டாளரென்றும், அவர்களுக்குச் சொர்க்கமே சாத்தியமில்லையென்றும், அவர்களின் ஸ்திரீகள் மேல் வகுப்பாரின் புணர்ச்சிக்காகவே படைக்கப்பட்டவர்களென்றும் சுயநலங்கொண்டெழுதி வைக்கப்பட்டிருந்த புத்தகங்கள் தீக்கிரையாக்கப்பட்டன. நரபலி முதலிய அனேக ஜீவாத்மாக்களை தெய்வத்தின் பெயரால் பலிகொடுக்கப்பட்டு வந்த பைசாசத்தின் ஆலயங்கள் தகர்த்தெறியப்பட்டன. சனாதனிகள் என பெயர்பூண்டு பாமர மக்களிடமிருந்து பணம் பறித்து வயிறு வளர்த்துவந்த பக்காத் திருடர்களின் கூட்டம் பறக்கடிக்கப்பட்டது.

இவ்வாறு இஸ்லாத்தின் தெய்வீகத்தையும் பரிசுத்தத் தன்மையும் பாதுஷாவால் பிரச்சாரம் செய்யப்பட்டு வருங் காலையிற்றான் சுகுமாரன் என்னும் அழகிய வாலிபனொருவனும் இஸ்லாத்தைத் தழுவினான். பெற்றோரும் சுற்றத்தாரும் எவ்வளவோ தடுத்தும் ஒன்றுக்கும் அசைந்தானில்லை. மலரைக் கண்ட வண்டு அதிலிருக்கும் அமுதத்தையருந்தாமல் நகராதல்லவா? சுற்றத்தாரும் ஊரவரும் அவனை ஹிம்சிக்க ஆரம்பித்தனர். சத்தியத்தையறிய ஆற்றலில்லாத மக்களின் அஞ்ஞானத்தைச் சிந்தித்தவனாக கொடுமை பொறுக்கமுடியாமல் ஊரைவிட்டே கிளம்பிவிட்டான். கிளம்பியவன் நேரே டில்லியையடைந்து பாதுஷாவிடம் தன் குறையைக் கூறி பாதுஷாவின் மெய்க்காவலரில் ஒருவனாக அமர்ந்துகொண்டான்.

மின்வெட்டி மறைந்ததுபோல் இரண்டு வருஷங்கள் ஓடி மறைந்தன. தன் ஊருக்குப்போய் வர நாடியது அவன் மனம். தன் பெற்றோரையோ, பந்துக்களையோ பார்க்க வேண்டுமென்பதற்காகவல்ல. அவர்களைப் பார்க்கவும் அவன் விரும்பவில்லை. தன் இன்னுயிர் நண்பன். இணைபிரியாத் தோழன் ஜெயபாலனைக் காணவேண்டியே அவன் மனம் ஊர் போய்வர நாடியது. ஜயபாலன் எளிய குடும்பத்தவன். கற்பனா உலகிலே சஞ்சரிக்கும் ஓர் பிராணி. அவனுக்கு நாலைந்து பசுக்களிருந்தன. பால் கறந்து விற்பதுதான் அவனது தினசரித் தொழில். தன் நிலைமையை மறந்து விஜயாவெனும் ஒரு சீமானுடைய பெண்ணின் பேரில் காதல் கொண்டான். அவள் தன் இளமைப் பருவத்தில் தன் வேலையாள் பால் வாங்குவதற்காக ஜயபாலனிடம் வரும்போதெல்லாம் உலகமறியாத அச்சிறுமியும் கூட வருவது வழக்கம். அவளது துருதுருத்த பார்வையும், மருண்டு நோக்கும் மான் விழியும் ஜயபாலனை வசீகரித்தன, அவன் அவளிடம் அன்பு பாராட்டத்தொடங்கினான். பசுவிலிருந்து பால் கறந்ததும் ஒரு சொட்டு ஜலம்கூடச் கலக்காமல் அப்படியே கொதிபாலை அவளுக்குக் குடிக்கக் கொடுப்பான். இப்படியாக அவர்களது அன்பு வளர்ந்து வரலாயிற்று.

வழக்கம்போல் ஒருநாள் வேலையாள் பாலுக்கு வந்தான். ஆனால் வழக்கத்திற்கு விரோதமாக அவன் மட்டும் தனியே வருவதைக்கண்ட ஜயபாலன் திடுக்கிட்டான். அவன் மனதில் அந்த ஒரு விநாடியில் ஆயிரம் எண்ணங்கள் தோன்றி மறைந்தன. கடைசியாக வேலைக்காரனிடமே கேட்டு விடுவதென்று தீர்மானித்துக்கொண்டு மெதுவாக பேச்சையாரம்பித்தான். "என்ன சுரேந்திரா ஏன் இன்று விஜயா வரவில்லை?" "சின்னம்மா ருதுவாகிட்டாங்க. ஆகையால் இனிமேல் வரமாட்டாங்க" என்றான் வேலையாள் சுரேந்திரன். ஜயபாலனின் வாயிலிருந்து வேறு ஒரு வார்த்தையும் வரவில்லை.

அவன் மனம் எண்ணக்கடலிலாழ்ந்தது. அப்படியானால் இனி அவளை நான் சந்திக்கவே முடியாதா? அவள் தந்த வாக்குறுதிகளெல்லாம் இளமையின் விளையாட்டு வார்த்தைகள் தாமா? ஆஹா! அவள் புன்னகை தவழும் முகத்தைப் பார்த்துக்கொண்டே எத்தனை நாள்களுக்கும் இருக்கலாமே. அவள் உடம்புதான் என்ன அழகு? அழகுக்கு அணிகலன்போன்ற குணம். அவள் பேசும் வார்த்தைகளோ குணத்தைப் பிரதிபலிப்பதுபோல் மதுரமொழிகளா இருந்தனவே! அவளையே என் உடமையாக்கொண்டு இவைகளை எல்லாம் கேட்டும் கண்டும் ஆனந்திக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா? முடவன் கொம்புத்தேனுக்குஆசைப்படுவதுபோல்தான். அவள் செல்வமெங்கே? என் ஏழ்மை எங்கே? என்றெல்லாம் எண்ணினான்.

ஒரு நாள் மாலை வேளை. வெய்யோன் பகலெல்லாம் தன் ஆதிக்கத்தைச் செலுத்திவிட்டு, கேவலம் ஒரு சிற்றரசனான சந்திரனுக்குப் பயந்துகொண்டு ஓடி ஒளிவதற்கு இடம்தேடி மேற்றிசையைநோக்கிச் சென்றுகொண்டிருந்தான். அவன்செல்லும்பொழுது அந்திவானத்தின் அழகரானது என்னுடைய இந்த அழகுக்காவது மீண்டும் என்னை நீங்கள் விரும்பத்தான் செய்வீர்கள்என்று சகல ஜீவஜந்துக்களிடமும் மார்தட்டி சபதம்செய்வதுபோல் இருந்தது. ஜயபாலன் பசுக்களுக்கு இரைவைத்துவிட்டு சற்று ஓய்வுவாங்குவதற்காக ஆற்றங்கரையை நோக்கி வந்துகொண்டிருந்தான். எப்பொழுதும் அவன் அப்படி வருவது வழக்கம். ஆனால் என்றுமில்லாத ஒரு ஆச்சர்யம் அன்று நிகழ்ந்தது; யாரோ ஒரு பெண் அவன் வருகைக்காகவே எதிர் பார்த்துக்கொண் டிருப்பவள்போல் அங்கே நின்றுகொண்டிருந்தாள். இவனைக் கண்டதும் நாணத்தால் அவள் முகம் சிவந்தது. கீழே குனிந்தவண்ணம் நின்றுகொண்டிருந்தாள். ஜயபாலனும் கூர்ந்து கவனித்தான். அவனுக்கு ஆச்சர்யம் தாங்கவில்லை. யார்; அவளா? இன்னும் ஒருவருஷங்கூட ஆகவில்லையே அதற்குள்ளாகவே இவ்வளவு பெரியவளாகிவிட்டாள்? ஆம் அவளேதான்; சந்தேகமில்லை என்று எண்ணிக்கொண்டே அவளை நெருங்கினான். அவளும் தலையை நிமிர்த்திப்பார்த்தாள். இருவர் கண்களும் சந்தித்தன. பிரிந்தவர்கூடினால் பேசவும் வேண்டுமோ? இப்பொழுது அவள் எவ்வளவு அழகுடன் விளங்குகிறாள்? முன்னிலும் பன்மடங்கு அழகு சோபிக்கிறது. சிருஷ்டி என்ற அற்புதத்தின் முக்கிய அம்சமாகிய யௌவனவழகைப்பெற்று அதன் ஆடம்பரம் அவளது கமல சரீரத்திலும், பேச்சிலும், நடத்தையிலும் காணப்பட்டது. அவர்களது மௌனத்தைக் கலைப்பதுபோல் விஜயாவே பேசத் தொடங்கினாள்.

விஜயா:—ஜயபால் எனக்கு நீ கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவாயா?

ஜயபாலன்:—ஜயா! அது என் பாக்கியமாகவே கருதுகிறேன். எனக்குக் கிடைக்குமாவென்பது சந்தேகம். உன் பெற்றோர்களின் சம்மதம் வேண்டாமா?

விஜயா:— அதற்காகவே உன்னைத் தேடி இங்குவந்தேன். என் தந்தை எனக்கு ரவீந்திர பிரபுவை வரன் பேசுகிறார். என் உயிர் உடலிலிருக்கும்வரை இன்னொரு ஆடவர் என்னைத் தீண்டவிடுவதில்லை என்று சபதம் செய்துகொண்டிருக்கிறேன். என் தந்தையிடம் எவ்வளவோமன்றாடினேன். ஒன்றுக்கும் இணங்கினாரில்லை. அவரையே முடிவுசெய்யப்போவதாக நிச்சயமாகச்சொல்லிவிட்டார். செத்தாலும் உன் பாதகமலங்களிலேயே சாவேன். ஆகையால் நாம் இனி இங்கிருந்தால் ஆபத்துதான். எங்காவது போய்விடலாமென்றெண்ணுகிறேன்.

ஜயபாலன்:—ஜயா இரு இளம் உள்ளங்கள் ஒன்றுசேர்ந்து ஆனந்தமாக தங்கள் வாழ்க்கைத்தோணியை ஓட்டிச்செல்லவிடாமல் பலதடைகளை குறுக்கே போட்டு அதிற்போய் மோதி அந்தத்தோணி சுக்கு நூறாகச் சிதறி அதிலிருக்கும் ஜீவன்களையும் ஆற்றில் மூழ்கி இறக்கச்செய்யும் அநியாயமான நமது நாகரிகத்தை நினைக்கும்பொழுது, எனது ஆருயிர் நண்பன் ஸுகுமாரன் சென்ற வழியை நாமும் ஏன் பின்பற்றக் கூடாதென்றே தோன்றுகிறது. எதற்கும் நாளை நாம் நடந்துகொள்ளவேண்டிய முறையைச்சொல்லுகின்றேன். அதுவரை பொறுமையாயிரு - என்று சொல்லிக்கொண்டே அவளைக்கட்டி ஆலிங்கனம் செய்துகொண்டான். இருவரும் அவ்வாலிங்கனத்திலேயே உலகை மறந்து சிறிது நேரம் லயித்திருந்து பிரிந்து தத்தம் இல்லம் சென்றுவிட்டனர்.

அடுத்த நாள் விஜயாவின் வீட்டில் தந்தைக்கும் மகளுக்கும்விவாதம் நடந்தது. "அப்பா நிச்சயமாகச்சொல்லுகிறேன். அவரையன்றி வேறு யார் கழுத்திலாவது என்னைக் கட்ட நினைத்தீர்களானால் நீங்கள் என் உயிரற்ற உடலைத்தான் காணமுடியும். தங்கள் புதல்வி தன் இஷ்ட பூர்வமான புருஷனுடன் சவுக்கியமாகவாழப்போவதைக்காணப்போகிறீர்களா? அல்லது அவள் தற்கொலை செய்துகொண்டு மாண்டாளென்னும் அபவாத அவமானத்திற்காளாகப் போகின்றீர்களா? இத்தகைய தங்கள் பிடிவாதத்தைக் காணும்போது நான் ஏன் இஸ்லாம் மார்க்கத்தைப் பின்பற்றலாகாதென்றும், கடுமையானதும் கொடுமையானதுமான இந்து தர்மத்தில் ஏன் ஜனித்தேன் என்றும் என்மனம் பெரிதும் வருந்துகிறது. வயதுவந்த பெண் தன்சம்மதமில்லாமல் எவரையும் கணவனாய்க்கொள்ள இஸ்லாம் சம்மதிக்கவில்லை. சதிபதிகளான இருவரின் சம்மதத்தின்மீதே இஸ்லாம் விவாகமகத்துவத்தை அனுமதிக்கிறது. இஸ்லாத்தின் சட்டம் எவ்வளவு அழகாய் திருப்தியாய்க் காணப்படுகிறது பார்த்தீர்களா?" என்றாள் விஜயாள்.

"ஜயா நீ சொல்வது நியாயந்தான். நான் அதை மறுக்கவில்லை. நீயும் குழந்தையல்ல. நம் குடும்பத்தின் நிலையை நன்றாயறிவாய். மோஹன்லாலுக்கு நாம் கொடுக்கவேண்டிய பத்தாயிரம் மோஹராக்களும் அடுத்த வசந்தத்திற்குள் கொடுத்தாகவேண்டும். இல்லையெனில் நம் வீடுங்கூட ஜப்திசெய்யப்பட்டுவிடும். உன்னை ரவீந்திர பிரபுவுக்குக்கொடுத்தால் அந்த பத்தாயிரம் மோஹராக்களையும் தான் கொடுப்பதாக ஏற்றுக்கொள்ளுகிறார். அதனாலேயே நான் இந்த முடிவுக்கு வந்தேன். நீ விரும்பும் ஜயபாலன் பரம ஏழை. நம் கடன் தீர்க்க பத்தாயிரம் மோஹராக்கள் அவன்எப்படித்தரமுடியும்?" என்றார் தந்தை. எந்தவிதத்திலும் ஜயபாலனால் வசந்தத்திற்குள் பத்தாயிரம் மோஹராக்கள் தர முடியாதென்பது அவருக்கு நிச்சயமாய்த் தெரியுமல்லவா?

மாட்டுக் கொட்டிலில் ஒரு பழைய கயிற்றுக் கட்டிலில் தூக்கமில்லாமல் அங்குமிங்குமாகப் புரண்டுகொண்டிருந்தான் ஜயபாலன். இரவு நடு நிசிக்கு சற்று முன்னால் யாரோ கதவைத்தட்டும் சத்தம் கேட்டு நிதானமாக எழுந்து சென்று கதவைத்திறந்தான். எதிர்பாராத விதமாக விஜயாநிற்கக்கண்டு ஆச்சரி

யம் மேலிட்டவனாய், சுற்று முற்றும் பார்த்து விட்டு உள்ளே அழைத்து கதவைச் சாத்திக் கொண்டு மௌனியாக அவள்முன் நின்று கொண்டிருந்தான். விஜயாசொன்னாள் "ஜெயபால், நாம் சதிபதிகளாய் வாழவேண்டுமாயின் நம் எண்ணங்கள் நிறைவேற வேண்டுமாயின் வருகிற வசந்தத்திற்குள் பத்தாயிரம் மோஹராக்கள் நீ தேடவேண்டும்." "ஆ! பத்தாயிரம் மோஹராக்களா? நாலைந்து பசுக்களுடன் ஜீவனோபாயம் செய்துகொண்டிருக்கும்நான் பத்தாயிரம் மோஹராக்களுக்கு எங்கே போவது? பத்தாயிரம் மோஹராக்கள் ஒரு சிறிய தொகையா? ஜயா இன்னும் வசந்த காலத்திற்கு இரண்டு மாதங்கள்தானேஇருக்கிறது! அதற்கிடையில் நான் இவ்வளவு பெரிய ஒரு தொகைக்கு எங்கேபோவது?" என்று கெஞ்சும் தோரணையில் சொன்னான் ஜயபாலன்.

"ஜயபால், நான் என் அப்பாவிடம் எவ்வளவோ மன்றாடிப்பார்த்துவிட்டேன். அவர் இதையே தீர்மானமாகச் சொல்லிவிட்டார். மோஹனலாலுக்குப் பத்தாயிரம் மோஹராக்கள் கொடுக்கவேண்டியிருக்கிறதாம். ரவீந்திர பிரபுவுக்கு என்னைக்கட்டிக்கொடுத்தால் அந்தக்கடனைத் தான் கொடுத்துவிடுவதாகச் சொல்லுகிறாராம். ஆகையால் இந்தத்தொகையை நீ எப்படியாவது தேடிவிடவேண்டும். மிதமாயிருக்கக்கூடாது. என்தந்தையிடமும் தீர்மானமாகச் சொல்லிவிட்டேன். நீ எப்படியாவது அந்தத் தொகையைத் தந்துவிடுவாயென்று" என்றாள் விஜயா.

இவ்வாறு இருவரும் பேசிக்கொண்டிருக்கும் பொழுது அவசரமாக யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டு திடுக்கிட்டனர். இருவர் உள்ளங்களும் ஏககாலத்தில், மலையில் மோதிய கானாற்று வெள்ளம் போல் சிதறிவிட்டது. செய்வது அறியாது இருவரும் திகைத்தனர். ஜெயபால் என்று கூப்பிட்டுக் கொண்டே மீண்டும் தட்டும் சத்தம் கேட்டு ஆச்சர்யமடைந்தான் ஜெயபால். அவன் மனதில் அந்த ஒரு விநாடியில் ஆயிரம் எண்ணங்கள் தோன்றி மறைந்தன. சுகுமாரன்தானா? இல்லை அவனாக இருக்க முடியாது என்று பலவாறாக அவன் மனம் சிந்தனை செய்து கொண்டிருந்த சமயம் அவன் சிந்தனையைக் கலைப்பது போல் மீண்டும் கதவு தட்டும் சத்தம் கேட்டு அவசரமாகப் போய்க் கதவைத் திறந்தான். அவன் எதிர்பார்த்தது போலவே வாசலில் சுகுமாரன் நிற்கக் கண்டு ஆச்சர்யமும் ஆனந்தமும் ஏக காலத்தில் ஏற்பட்டதால் பேச நாவெழாது மௌனிகளாகவே உள்ளே சென்று கட்டிலின் மேல் அமர்ந்தனர். ஒரு ஓரமாக நின்று கொண்டிருக்கும் விஜயாவின் பேரில் அவன் கண் விழுந்தது. அவளையே கூர்ந்து கவனித்தான். ஜெயபாலன் விஜயாவை மணந்து கொண்டானென்றே எண்ணி உள்ளம் பூரித்தான். எப்படி மணந்தாய், எவ்வளவு நாளாகிறது? அவள் பெற்றோர் எப்படி சம்மதித்தனர் என்னும் கேள்விகளைக் கேட்டு தெரிந்து கொள்ள விரும்பினான் சுகுமாரன்.

"சுகுமார்! இப்பொழுதாவது இங்குவர நினைத்தாயே அதுவே என் பாக்கியம் இரண்டு வருஷமாக உன்னைக் காணாமல் நான் என்ன பாடுபட்டேன் தெரியுமா? நண்பா உன் பிரிவு எனக்கு வாழ்க்கை ரதம் ஒரு சக்கரத்தை இழந்தது போல் இருந்தது. அதோபார் அண்ணா வென்று கூப்பிட்டுக் கொண்டே உன் அருகில் ஓடிவரும் உன் விஜயாதான் அதோ நிற்கிறாள். இப்பொழுது அவள் சிருஷ்டியின் முக்கிய பாகமாகிய யௌவனத்தை அடைந்திருக்கிறாள். அவளே எனக்குத் தகுந்த மனைவி என்று எத்தனையோ முறை நீ என்னைக் கேலியைப் போல்சொல்லிக் காட்டினாய். நானும் அவள் பேரில் பிரேமை கொண்டிருந்தேன். அவளை மணந்து என் பிற்கால வாழ்க்கையைப் பற்றி மனக்கோட்டைகள் கட்டினேன். ஆனால் அத்தனையும் இடிந்து தகர்ந்து சுக்கு நூறாகி சிதறிப் போய்விடும்போல் தெரிகிறது. நல்ல சமயத்தில் நீயும் வந்தாய். இரண்டு வருஷமாகுதே, நீ போய். இத்தனை காலமும் எங்கே என்ன செய்து கொண்டிருந்தாய்?" என்று மூச்சுவிடாமல் கேட்டுக்கொண்டே போனான் ஜெயபாலன்.

சுகுமார்:—அப்படியானால் இன்னும் நீ விஜயாவை மணந்து கொள்ள வில்லையா? ஏன் அதற்கு யார் தடையாய் இருக்கிறார்கள்?

"நண்பா! இப்பொழுதுதான் நீவருவதற்கு சொற்ப நேரத்திற்கு முன்புதான் அந்தப் பேரிடி என் தலையில் விழுந்தது. அதைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறோம். நான் அவளை மணக்க வேண்டுமானால் வருகிற வசந்தத்திற்குள் பத்தாயிரம் மொஹராக்கள் தரவேண்டுமாம்; பத்தாயிரம் மொஹராக்கள்"

"ஆ, பத்தாயிரம் மொஹராக்களா? அட ஆண்டவனே! ஒரு பெண்ணை மணக்க



வேண்டுமானால் அவளுக்காக அவள் பெற்றோர்கள் பத்தாயிரம் மொஹராக்களைக் கேட்பதா? என்ன அநியாயம்? கள்ளங்கபடற்ற உள்ளம் படைத்த காரிகையர், கபட நாடகத்தால், வண்டினங்கள் வெகு சிரமத்துடன் தேனைச் சேகரிக்க அதை வேடன் அபகரித்துச் செல்வது போல், தங்கள் காலம் பூராவும் பணத்தைச் சேகரித்து, அதை தங்கள் காலங்களிலேயோ, அல்லது தங்களுக்குப் பின்னாலேயோ பிறர் அபகரித்துச் செல்லத் தக்க பணத்தைக் கட்டிக்காக்கும் பிசாசுகளைப் போன்ற பெற்றோர்களுக்கு ஏனோ ஜனிக்க வேண்டும்?" என்று தனக்குள் எண்ணியவனாய் சிறிது நேரம் இருந்து விட்டு, "ஜயபால் அப்படியே தருவதாக ஒப்புக்கொள், நான் சென்று வருகிறேன்" என்று சொல்லி விட்டு பதிலையும் எதிர்பாராமல் சென்று விட்டான். சுகுமாரன்.

ஒரு வாரத்திற்குப் பிறகு மீண்டும் திரும்பி வந்து நண்பனிடம் ஒரு பொட்டலத்தைக் கொடுத்து கலியாணத்திற்கு என்னை எதிர்பாராதே என்று சொல்லி விட்டு மறைந்து விட்டான்.

ஒரு சுபதினத்தில் ஜயபாலனுக்கும் விஜயாவுக்கும் வெகு சிறப்பாக திருமணம் நடந்தது. அதே தினத்தில்தான் டில்லி தர்பாரில் ஔரங்கசீப் பாதுஷாவின் முன்னிலையில் அமீனுல்லாவுக்கு பத்து வருஷம் சிறைவாச தண்டனையும் கிடைத்தது. ஜயபாலனுக்கும் விஜயாவுக்கும் இன்று தான் திருமணம் என்பது அவனுக்குத் தெரியாது. என்றாலும் அவன் மனது மட்டும் சந்தோஷ மடைந்திருந்தது ஒரு பெரிய வெற்றி கிட்டி விட்டது போல் முகம் மலர்ந்திருந்தது.

---

# முஸ்லிம் சமூகப் பிரச்னைகள்

(By : கண்டி ஜனுப் A. M. A. அஜீஸ், B.A., Hon. (Lond.) c.c.s.)

(*Assistant Government Agent, Kandy.*)

(முன் தொடர்)

எனவே நாம் நம்முடைய கடமையைச் செய்து முடிக்கும் வரையில் வெளியிடங்களிலிருந்து உதவியை எதிர் பார்க்க நமக்கு உரிமை கிடையாது. இக் கடமைகளைச் சரிவரச் செய்து முடிக்க அவசியமான அறிவும், அவ் வறிவை நடைமுறையில் கொண்டு வரும் ஆற்றலும் அவசியமாகும். கல்வியைச் சம்பாதிப்பது நம்முடைய நிலைமைகளை அறிந்துகொள்ள உதவியாக யிருக்கும். இதுமாத்திரமல்ல; அரசாங்கத்தின் சமூக சேவை நடவடிக்கை திட்டங்களைப் பற்றிய முக்கியத் துவத்தையும் விலைமதிப்பையும் அறிந்து கொள்வதற்கு நமக்கு அநுகூலமாக யிருக்கும். இந்தச் சமூகச் சேவை திட்டங்களில் நாம் பரிபூரணமான பங்கு எடுத்துக்கொள்ளவேண்டும். அவைகள் மூலம் நாம் அடையக்கூடிய அதிகமான நன்மைகளை நாம் பெறல்வேண்டும். சக்காத் பைத்நுல்மால் என்ற ஏற்பாடுகளை நாம் அறிவோம். அவைகளை அறிந்த நாம் இவ் விஷயத்தில் பாராமுகமாய் இருப்பது நியாயமாகாது. வைத்திய சுகாதார இலாக்காத் தலைவர் செய்துகொண்ட வேண்டுகோளை அங்கீகரிக்க நம்மில் ஒருவராவது முன்வந்தது பற்றி சந்தோஷம் கொண்டிருக்கின்றோம். அவ்விதம் முன்வந்திருப்பவர் காலியில் உத்தியோகம் வகிக்கும் டாக்டர் எஸ். எம். எம். ஜாபிர். காலியிலும், கொழும்பிலும் பிரசவ சாலை ஸ்தாபிக்க அவர்தான் மூலகாரணம். இது சம்பந்தமாய் நம்முடைய முஸ்லிம் வாலிபர் சங்கத்தில் அவரது பிரசங்கத்தைக் கேட்கும் பாக்கியத்தை நாம் சீக்கிரம் பெறுவோம். எல்லா நகரங்களும், முஸ்லிம் கிராமங்களும் கொழும்பு காலி இவைகளின் உதாரணத்தைப் பெற முடியாது. ஏனெனில் அதற்குப் போதிய பண வசதியும் கிடையா. எனவே, இது சம்பந்தமாக அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளில் நாமும் கலந்து கொள்ள வேண்டும். இந்தச் சுகாதார விஷயத்தில் மாத்திரமன்றி, மற்றும் அரசாங்கம் எடுத்தவரும், அல்லது எடுக்கப்போகும் மற்றும் விஷயங்களிலும் நாம் அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும். ஆகவே நாம் செய்யப்போகும் எல்லாக் காரியங்களுக்கும் கல்வி அவசியம். அக் கல்வி நன்மை பயக்கக் கூடியதாக யிருக்க வேண்டும். உயர்ந்த அந்தஸ்துள்ளவர்களுக்கு அளிக்கப்படும் உயர்தரக் கல்வியானது காலப் போக்கில் பொதுமக்கள் கல்விக்கு காரணமாகயிருக்குமென்று கருதியது ஸர் செய்யித் அஹ்மது கான் அவர்களின் காலத்துக்கு உகந்ததாகயிருக்கலாம். ஆனால், வடிகட்டப்பட்டுவிடப்படும் இக்கல்விமுறையின் தத்துவம் நம்முடைய 20-வது நூற்றாண்டுக்கும் போதுமானதல்லவென்பதை நாம் கண்டுகொண்டோம். இந்நாட்டு மக்களின் கல்வித் திறமையின் பேரிலேயே இந்நாட்டின் தலைவிதி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. எழுத்தறிவித்தல் ஒன்றைமாத்திரம், குழந்தைகளுக்கும் கற்பிக்கப்பட்டவுடன் பெற்றோர்களின் கடமை முடிந்துவிட்டதாக எண்ண முடியாது. குழந்தைகளின் வயது, மனப்பான்மை அல்லது நோக்கம் இவைகளுக்குத் தகுந்த முழுநேரக் கல்வி புகட்ட வேண்டியது பெற்றோர்களின் கடமையாக யிருக்கின்றது. ஆகவே ஸர் செய்யித் அஹ்மது அவர்களின் அக்காலக் கல்வி இலட்சியங்களை நிராகரித்துவிடவோ அல்லது போதியபடி திருத்தவோ வேண்டியதாக இருக்கிறது. ஆகவே, ஸர் இக்பால் அவர்களின் கல்வியின் போதனைத்துவங்களை நாம் சுவீகரித்துக் கொள்ளவேண்டியதாக யிருக்கிறது. அவருடைய இலட்சியமாவது :—



A. M. A. AZEEZ, *C. C. S.*

(*Kandy, Ceylon*)

வாழ்க்கை நடத்த ஆயத்தப்படுவதே கல்வியாகும். ஆகையினால் அது வாழ்க்கையொடு இயைந்தே பெறவேண்டும். அதற்கு கிரியாம்சைக்குப் பொருந்தியதும் அநுபவத்துக் குகந்ததுமான போதனைத் திட்டங்களும் வகுக்கப்படவேண்டும். சேமித்து வைக்கக்கூடிய அறிவையும் விஷயங்களையும் ஆதாரமாகக் கொண்டு போதனை முறையும் பாடங்களும் இருக்கக்கூடாது. அவ்விதமானால்தான் கல்விபெறும் குழந்தை வயது வந்தவுடன் அதற்கேற்றபடிக்கு ஆண்டவன் அருளி யிருக்கும் சுதந்தர புருஷசுபாவத்தை வளர்க்க கூடிய சுபாவத்தை விளங்க முடியும். கல்வி வாழ்க்கையை ஆயத்தப் படுத்துவதால் அது எல்லோருக்கும் தேவையானதாகும். கல்வி விஷயத்தில் நாம் பிற்போக்கடைந்திருப்பதாலும், அத்துறையில் நாம் காலதாமதமாக வந்து சேர்ந்திருப்பதாலும், பழையகாலத்தில் செல்லுபடியானவைகளாக யிருந்த சில இலட்சியங்களை நாம் பின்பற்றும் மனப்பான்மை ஏற்பட்டிருக்கிறது. பழையகாலத்தில் நமக்குத் தகுதியானவைகளாக யிருந்த இந்த இலட்சியங்கள் இப்பொழுது நம்மைக்காட்டிலும் அதிகப் பிற்போக்கடைந்திருக்கும் வகுப்புகளுக்கு அவசியமானவைகளாக யிருக்கின்றன. இது சம்பந்தமாக நாம் முன் எச்சரிக்கையுடனிருக்கவேண்டும். கல்வித் துறையில் நமக்கு முன் சென்றவர்கள் போதிய அநுபவ மில்லாமல் செய்த தவறை நாம் மறுபடியும் செய்யக்கூடாது. ஆங்கிலக் கல்வியை புத்திசாலித்தனமில்லாமல் கையாண்டதால் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டிருக்கிறதென்று மற்றவர்கள் உணர்ந்துகொண்டிருக்கையில் நம்மில் சில யுவர்கள் வர்த்தகத்தைக் கைவிட்டு விட்டு குமாஸ்தா (Clark) முதலிய சிறு உத்தியோகங்களுக்கு ஆசைப்படும்படியாக ஊக்கமூட்டப்பட்டு வருகின்றார்கள். வர்த்தகம் தொழில் முதலிய கல்வி திட்டத்தில் வற்புறுத்தப்படவேண்டும், என்று மற்றவர்கள் உணர்ந்து வருகையில் நாம் அதைப்பற்றிச் சிந்திப்பதே யில்லை. உபாத்தியாயர்களுக்கு வேண்டிய பயிற்சி அளிக்கப்படுவதின் அவசியத்தையும், விலைமதிப்பையும் மற்றவர்கள் உணர்ந்து வருகையில் நம்முடைய மனப்பான்மை "சக்தியுள்ளவன் தொழில் செய்கின்றான்; சக்தியற்றவன் உபாத்திமைத் தொழில் செய்கின்றான்" என்றிருக்கிறது. ஆகவே மற்றவர்கள் செய்த தவறை நாம் செய்யாமலிருக்கவேண்டும்.

கனவான்களே! நமது முஸ்லிம் சிறுவர்களும், சிறுமிகளும் ஆரம்பத்தில் சுதேச பாஷை மூலமாகக் கல்வி பெற நாம் கவனம் செலுத்தவேண்டும். இத் திட்டம் அரசாங்கத்தால் அளிக்கப்பட்டிருக்கின்றது. இந்த வசதிகளை நாம் போதுமானபடி இபயோகித்துக் கொள்ளவில்லை. இம்மாதிரியான வசதிகள் இல்லாத இடத்தில், இவ்வசதிகள் தேவை என்று நாம் வற்புறுத்தவும் இல்லை. இவ்வித நிலைமைக்குப் பெற்றோர்கள்தான் பொறுப்பு என்று ஒரு வகையில் சொல்லவேண்டியதா யிருக்கிறது. கல்வி அறிவு பெறாத அவர்களிடம் ஆரம்பப் பள்ளிக்கூடப் பயிற்சி அவர்களது சிறுவர் சிறுமிகளுக்கு அளிக்கும் நன்மையை உணரக் கூடிய சக்தியை எதிர்ப்பார்க்கக்கூடாது. போதிய அளவு முஸ்லிம் ஆண், பெண் உபாத்தியாயர்களில்லாமல், இவ் விஷயத்தில் இப் பெற்றோர்களுடைய் ஒத்துழைப்பைப் பெற முடியாது. இந்த ஆசிரியர்கள் தான் முஸ்லிம் பெற்றோர்களின் பிரத்தியேக மனப்பான்மையை அறிந்து கொள்ளக் கூடியவர்கள். அவர்களால்தான் முஸ்லிம் சிறுவர், சிறுமிகளைப் பள்ளிக்கூடங்களுக்கு வரும்படி செய்ய முடியும். பள்ளிக்கூடங்களில் கற்றவைகளை வீடுகளில் பயிற்சிசெய்யும்படி அவர்கள்தான் செய்யமுடியும். 1937ம் வருடத்திய கல்வி இலாக்கா அறிக்கையில் அதன் தலைவர் கூறியிருப்பதாவது:—

"முஸ்லிம் பகுதிகளில், தமிழ்ப் பள்ளிக்கூடங்களுக்கு ஆசிரியர்கள் தேர்ந்தெடுப்பதில் முஸ்லிம்களுக்குகே சலுகை காட்ட வேண்டும்" குறைந்த அளவு முஸ்லிம் யுவர்களுக்காயினும், மத்தியதாக்கல்வி நன்மை பயக்கும் என்பதைக்கூட முஸ்லிம்களே உணர்ந்துகொள்வது துர்லபமாகயிருக்கிறது

இது வருந்தத்தக்கதாகும். எனவே, போதிய பயிற்சியோக்கியதைபெற்ற முஸ்லிம் உபாத்தியாயர்கள் கிடைப்பது அரிதாகயிருக்கிறது. **முஸ்லிம் பெண்கல்வி மிக மந்த** நிலைமையை அடைந்திருக்கிறது. இதற்குப் பிறகு அளுத்காமம் பயிற்சி பள்ளிக்கூடத்திலும், அட்டாளச் சேனைப் பயிற்சிப் பள்ளிக்கூடத்திலும் முஸ்லிம் ஆண் தேச பாஷை உபாத்தியாயர்களை பயிலுவிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அப்படியிருப்பினும் ஜே. எஸ். ஸி. எஸ். எஸ். ஸி (J. S. C. S. S. C.) தமிழ் வகுப்புகளில் போதியமுஸ்லிம் மாணவ மாணவிகள் கிடைக்கவில்லை. "உபாத்தியாயர்கள் இல்லை ஆகையால் படிக்கக் குழந்தைகள் இல்லை, படிக்கப் போதுமான குழந்தைகள் இல்லை ஆகையால் உபாத்தியாயர்கள் இல்லை" என்றபடி மீண்டுவரும் இச்செயல் முஸ்லிம்களின் நலனுக்குக் கெடுதியாகயிருக்கிறது. இக்கெடுதியிலிருந்து தப்பிக்கொள்ள நாம் உபாத்தியாயர்களை அதிகமாக்கவேண்டும். இல்லாவிட்டால், பாதகம் விளையும். உயர்தர வகுப்புகளில் போதிய முஸ்லிம் வாலிபர்கள் கிடைக்கவில்லையானல் மத்திய வகுப்புகளிலிருந்து மாணவர்களை ஆசிரியப் பயிற்சிப் பள்ளிக்கூடங்களில் சேர்த்துக் கொண்டு அவர்களுடைய பயிற்சி காலத்தைத் தகுந்தாற்போல் நீடித்துக்கொள்ள வேண்டியதுதான், இதற்குவழி. இவ்விதக் கல்விபெறும் நம்முடைய சிறுவர்கள்தான் எதிர்காலத்தில் பயிற்சிபெற்ற தமிழ்பள்ளி ஆசிரியர்களாகவும், கிராமங்களில் கல்வியைப் பரப்புகிறவர்களாகவும். ஆகப்போகின்றனர். இம்மாதிரியான போதனமுறை முஸ்லிம் **பெண்களுக்கும்** மிக அவசியமாகயிருக்கிறது. **முஸ்லிம் பெண்களுக்காக தனியாகப் பாடசாலைகள்** ஆரம்பிக்கவேண்டியது அவசியமாகும். அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களும் **பெண்களாக**யிருக்கவேண்டும். எனக்குத் தெரிந்தமட்டில் பயிற்சிபெற்ற **பெண்** ஆசிரியை ஒருவர்தான் இலங்கையில் யிருக்கின்றார். முஸ்லிம்களின் பிற்போக்கை காண்பிக்க இஃதொன்றே போதும்! இந்த ஆசிரியை **கல்முனை**யைச் சேர்ந்தவர். நம்முடைய கல்வித்திட்டத்தில் இவ்விதமான கல்வி ஸ்தாபனங்களுக்கு முதல்தரமாக இடமளிப்பேன். இவ்விதமான ஸ்தாபனங்களில்லாமல் நமது சமூகத்துக்கு கதியேயில்லை. ஒரு சிலர் உயர்தரக்கல்வியைப்பெற்றுவிட்டதனுல், நிலைமை மாறிவிடப் போவதில்லை. கல்விச் சீர்திருத்தத்திற்கு முக்கிய கருவியாகவுள்ளது தகுந்த முறையில் உபாத்தியாயர்களைப் பயிலுவிப்பதேயாகுமென்று பிரத்தியேகக்கல்வி கமிட்டி சுட்டிக்காட்டியிருக்கிறது. "சென்ற நூற்றுண்டில் கல்வி அபிவிருத்திக்காகச் செய்யப்பட்டிருக்கும் முயற்சிகள்போதியபலனைக் கொடுக்கவில்லை. இதற்குக் காரணம் உபாத்தியாயர்கள் பயிற்சி பெறுவதற்குப் போதுமான வசதிகள் செய்யப்படாதது தான்" என்று அவ்வறிக்கை மேலும் கூறுகிறது. நம்மைக் காட்டிலும் முன்னேற்றமடைந்திருப்பவர்களைப்பற்றியே இவ்விதம் எழுதப்பட்டு, அது உண்மையாக யிருக்கவேண்டுமாஞல் முஸ்லிம் உபாத்தியாயர்கள் விஷயத்திலும் இது எவ்வளவு பொருத்தமுள்ளது என்பதை நாமே ஊகித்துக்கொள்ளலாம். தற்பொழுது, முஸ்லிம் ஆண் ஆசிரியர்களைக் காட்டிலும், **பெண் ஆசிரியர்கள்** அதிகம்தேவை நம் குழந்தைகள் மூன்ருவது, நன்காவது வகுப்புகளுடன் தங்கள் படிப்பை நிறுத்திவிடாமல், பிரைமரி வகுப்புகளுக்கு மேலும் படிக்க நமது சிறுவர் சிறுமிகளுக்குப் போதிக்கவேண்டும்.

நமது ஆரம்பப் பள்ளிக்கூடங்களில், அரபிமொழி போதிப்பதற்கு இலங்கைக் கல்வி இலாக்காவில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இது நமது பாக்கியமே. அரபி பாஷையின் அவசியத்தை எந்த முஸ்லிமும் மறுக்கமுடியாது. நான் இதை **எதிர்ப்பின்றிக் கூறமுடியும்.** ஆனல் பள்ளிக்கூடப் பாடத்திட்டத்தில் அரபிக்கு எத்தகைய ஸ்தானம்அளிக்கவேண்டும்? எப்போது எம்மட்டும் அது கற்பிக்கப்படவேண்டும்? என்பதை நாம் சீக்கிரம் முடிவுசெய்யவேண்டும். இப்பொழுது நாம் ஏதாவது தவறுதலான வழியில் ஆரம்பித்துவிட்டால் எதிர்காலத்தில் பெருந்தீங்கு விளைவதாக இருக்கும்.

இலங்கைச் சர்வகலாசாலையில் அரபி பேராசிரியர் டாக்டர் செய்யத் அக்தார் இமாமை நியமித்திருப்பது நமது பாக்கியந்தான். அவரிடம் அரபி பயிலுவது ஒரே ஒரு மாணவன்தான் என்று தொடர்ந்து இல்லாதிருக்கவேண்டுமானல் சர்வகலாசாலைப் படிப்பில் அராபியைப் பாடமாக எடுத்து வாசிக்கும் ஒரு சில மாணவர்களுக்கு (ஸ்காலர்ஷிப்) **உபகாரச்சம்பளம் கொடுக்கும் திட்டத்தை** நாம் ஏற்படுத்தவேண்டியது அவசியம். செக்கண்டரிப் பள்ளிக்கூடங்களிலும் லத்தீன் முதலிய வேறு பாஷைகளைப் படியாமல், அரபியைப் படிக்கவிரும்பும். மாணவர்களுக்கு இவ்விதஇலவச உபகாரச்சம்பளம் அளிக்க ஏற்பாடுசெய்ய வேண்டும்.

நமது இஸ்லாம் சிறுவர், சிறுமிகளுக்கு மத போதனை செய்யத் தேர்ச்சிவாய்ந்த ஆலிம்கள் மிகக்குறைவு. மத சம்பந்தமான பள்ளிக்கூடங்களில், போதன திட்டத்தை நவீன முறையில் அமைக்கவேண்டும். நமது உலமாக்கள் அவர்களுடைய படிப்பை, மிஸ்றுபட்டினத்திலோ (எகிப்து) அல்லது இந்தியாவிலோ தொடர்ந்து படித்துக்கொள்ள ஒரு நிதி திரட்டப் படல்வேண்டும். இவ்விரண்டும் நமது சமூகத்துக்கு அத்தியாவசியமான தேவைகள். இஸ்லாத்தில் புரோகிதமில்லை. ஆகையால் இந்த உலமாக்களுக்கும் ஆலிம்களுக்கும் வேலை உத்திரவாதம் செய்யப்படல் வேண்டும். நம்முடைய முக்கியமான பள்ளிகளுக்கு, இவர்களிலிருந்தே **பேஷ் இமாம்கள்** நியமிக்க பள்ளி தர்மகர்த்தர்கள் முயற்சிக்க வேண்டும்.

நமது தமிழ்முஸ்லிம் பள்ளிக்கூடங்களில் திருப்தியான பாடப்புத்தகங்கள் இல்லை, நமக்கு வேண்டிய புத்தகங்களில் முஸ்லிம்களின் கலாச்சாரத்தைப்பற்றி ஒன்றும் எழுதப்படவில்லை. இம்மாதிரியான நல்ல பாடப்புத்தகங்களைத் தயார்செய்து, குழந்தைகளுக்குக் குறைந்த விலையில் கிடைக்க ஏற்பாடு செய்யவேண்டும். இம்மாதிரியான நல்ல பாடப் புத்தகங்கள் இல்லாமையால் முஸ்லிம் பெற்ரேர்களில் அநேகர், தங்கள் குழந்தைகள் மீது படிப்பில் வெறுப்புகாட்டி, படிப்பையே நிறுத்திவிடுகின்றனர்.

ஏழை முஸ்லிம் சிறுவர், சிறுமிகளுக்கு ஆரம்பக்கல்வி, மத்தியதரக்கல்வி, உயர்தரக் கல்வி பெறுவதற்கு உதவியாக யிருக்கும்படி அவர்களுக்கு உபகாரச்சம்பளம் அளித்தலை அதிகமாக்கவேண்டியது அவசியம்.

இன்னும் நமது சமூகத்துக்குவேண்டிய பல விஷயங்களிருக்கின்றன. இவைகளை எல்லாம் நல்லவிதமாகத் தீர்க்கவேண்டுமானல், கல்வியால்தான் முடியும். அக்கல்வி பட்டினங்களுக்கும், **செல்வர்களுக்கு** மாத்திரம் அளிக்கக்கூடியதாக யிருக்கக்கூடாது. இலங்கை முழுதும், ஒரு குடிசைகூட விடாமல் அது பரவியிருக்கவேண்டும். இவ்விஷயம் இந்திய முஸ்லிம்களுக்கும் பொருந்தும்.

[குறிப்பு:—என்னுடையஇப்பிரசங்கத்தை "நூருல் இஸ்லாத்துக்கு எழுதி அனுப்பிய என்னுடைய நண்பர் ஜனுப் வ. மி. ஷம்சுத்தீன் அவர்கட்கு எனது நன்றி உரித்தாகுக.]

# த னி மை

(By : குகன் எம். கே. குருசாமி).

கமலா, பிரசவத்திற்காகத் தனது தகப்பனர் வீட்டுக்குச் சென்று, பத்தொன்பது நாட்களாகிவிட்டன. அந்தப் பத்தொன்பது நாட்களும், பத்தொன்பது யுகங்களாகவே தோன்றியது மாதவனுக்கு, கமலா திரும்பி வருவதற்கு இன்னும் ஒருமாதமோ? இரண்டு மாதமோ? என்று நினைக்கும்போது மாதவனுக்கு மிகுந்த சங்கடமாக இருந்தது.

கமலா பிறந்த வீடு போனதுமுதல், மாதவன் ஹோட்டலிலேயே சாப்பிட வேண்டிய தாகிவிட்டது. ஹோட்டலிலிருந்து வீட்டுக்கு வந்ததும், அவனுக்கு என்னமோ போல் இருக்கும். தன்னுடைய வீடு சூன்யமடைந்திருப்பதாகவே அவனுக்குத் தோன்றும். பொழுதும் போகாது. அவனது மனம் ஏங்கிக்கொண்டே இருக்கும்.

கமலா இருக்கும்போது, மாதவனுக்கு எவ்வளவோ ஆனந்தம். ஆபீஸைவிட்டுக் களைத்துப்போய் வீடு திரும்பியதும், கமலா அவனை ஓர் புன் சிரிப்புடன் வரவேற்பாள். அப்போது அவனது களைப்பு, ஆயாஸம் எல்லாம் எங்கோ ஓடி மறைந்து விடும். முக மலர்ச்சியுடன் நாற்காலியில் உட்காருவான். நல்ல சூடான காப்பியை கமலா கொண்டு வந்து கொடுப்பாள், அதைக் குடித்தபின்பு இருவரும் பேசிக்கொண்டே இருப்பார்கள்.

"நீங்கள் ஆபீஸ் போனபிறகு எனக்குப் பொழுதே போறதில்லை" என்பாள் கமலா, நாணம் கலந்த குரலில்.

"நீமட்டும் என்ன? ஆபீஸில் எனக்கும் கூட அப்படித்தான். என்ன செய்வது? உழைத்தால்தானே சோறு?"

"இல்லை, இல்லை! நான் சமைத்தால்தான் சோறு!" என்பாள் கமலா.

உடனே இருவரும் சேர்ந்து சிரித்துவிடுவார்கள்!

"அதுசரி உனக்கு ஒரு குழந்தை பிறந்துவிட்டால் என்ன பெயர் வைப்பாய் கமலா?" என்பான் மாதவன்.

"போங்கோன்னு!" என்று நாணத்தால் தலை கவிழ்ந்து கொள்வாள் கமலா. அவள் நாணமடைவதே ஒரு தனி யழகு!

"உம்......உனக்குக் குழந்தையே பிறக்காதோ?" என்று சொல்லிய வண்ணம் அவளது கன்னத்தில் ஓர் தாடனம் செய்வான். அப்போது கமலாவின் வாயினின்று ஓர் மெல்லிய சிரிப்புத் தோன்றும். தனது கூரிய விழிகளால் மாதவனை நோக்குவாள். அந்தப் பார்வை அவனை இன்ப உலகத்திற்குக் கொண்டுவந்துவிடும்.

அவைகளை எல்லாம் நினைக்கும்போது, தற்போதைய நிலைமை, மாதவனுக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. தனது மனைவியுடன் கூடிக் கழித்த இன்ப நாட்களையே ஒவ்வொரு நிமிஷமும் எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

கமலா கமுதிக்குச் சென்று ஒன்றரை மாதங்களாகிவிட்டன. இன்னும் பிரசவமாகவில்லை. இச் செய்தி மாதவனை வருத்தியது. இன்னும் எத்தனை நாட்களுக்குத் தான் இந்தத் தனிவாசம்? செ! சங்கடமான வாழ்வு" என்று பொறுமிய வண்ணம் நாற்காலியில் சாய்ந்தான். அவனது மனம் வேதனையால் சூழ்ந்துகொண்டது. ஆத்திரமும் கோபமும் பொங்கியது. "இங்கேயே குழந்தை பெறட்டும்" என்று எவ்வளவோ சொல்லியும் கேளாது, பிடிவாதமாகக் கமலாவைக் கூட்டிச்சென்ற, அவளது தாயின் மேல் மாதவனுடைய கோபம் திரும்பியது. "கொஞ்சமாவது புருஷர்களுடைய தன்மையை அறிவதில்லை! சுத்த முட்டாள்கள்" என்று மனதிற்குள் அவர்களைத் திட்டினன் மாதவன்.

கமலாவைப் போய் பார்த்துவிட்டு வந்தாலாவது அவனது மனம் நிம்மதி யடையும் போல் இருந்தது! ஆனல் பாழாய்ப்போன அந்த ஆபீஸில் லீவு கிடைப்பது மிகக் கஷ்டம். ஆகவே மாதவனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. தத்தளித்தான்.

சாயங்காலம் பீச்சுக்குச் சென்றான் மாதவன். அங்கே எத்தனையோ இளம் தம்பதிகள் குஷாலாகப் பேசி பொழுது போக்கிக் கொண்டிருந்தனர். அதைப் பார்க்கும்போது மாதவனுக்குத் தனிமையின் மனத் துடிப்பு அதிகரித்தது. மாதவனும் கமலாவுடன் எவ்வளவோ இன்பம் அனுபவித்தவன்தான். இருந்தாலும் அவளை விட்டுப் பிரிந்திருப்பது அவனுக்குச் சகிக்கவில்லை. அதிலும் அவள் கமுதி சென்று ஒன்றரை மாதமாகிவிட்டதே!

இரவு சாப்பிட்டுவிட்டுப் படுத்தான் மாதவன். ஆனல் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. படுக்கையில் புரண்டான். முணுமுணுத்தான். அவனது மூளை குழம்பியது. பின்பு சலிப்புடன் எழுந்துவந்து வரந்தாவில் அங்கு மிங்குமாக உலாவினன். அந்த வரந்தாவிலே சந்திரிகை தனது முழு ஆட்சியையும் புரிந்துகொண்டிருந்தது. மாதவன் கவலை தோய்ந்த முகத்துடன் சந்திரனை நோக்கினன். அப்போது அதன் எழிலை அவனல் ரசிக்கமுடியவில்லை. தன் பக்கத்தில் கமலா இருப்பதாகக் கற்பனை பண்ணிக்கொண்டு நிலவை நோக்கினன். அப்போது அவன் மனதில் பரமானந்தம் உதித்தது. பின்பு தன்னிலை யுணரும்போது ஒரு உஷ்ணம் கலந்த நீண்ட பெருமூச்சு விட்டான்.

கடிகாரம் இரண்டு மணி யடித்தது. மாதவன் சபல மனத்துடன் படுக்கைக்குச் சென்றான். படுத்துக்கொண்டே யோசித்து ஒரு முடிவு கட்டினன். "நாளை எப்படியாவது கமலாவிடம் போய்விட்டு வரவேண்டும். எந்தப் பொய்யாவது சொல்லி லீவு வாங்கிவிடவேண்டும்"! என்று ஓர் தீர்மானமான முடிவு செய்துகொண்டு நிம்மதியாக உறங்கினன்.

விடிந்தது, எழுந்து ஸ்நானம் செய்தான். நல்ல உடைகளை அணிந்துகொண்டான். சாப்பாடும் முடிந்தது. நேரே ஆபீஸுக்குச் சென்றான் லீவு வாங்குவதற்கு. அன்று அவன் சுறு சுறுப்பின் தேவனகவே காட்சியளித்தான். அவனது முகத்தில் புது விதமானதோர் சோபை ஏற்பட்டது.

எப்படியோ அடித்துப் பிடித்துப் பத்து நாட்களுக்கு லீவு வாங்கிவிட்டான். சாமான்களைத் தூக்கிக்கொண்டு ஸ்டேஷனுக்குச் சென்றான். அங்கே அவன் டிக்கட் வாங்குவதற்குப் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. மானமதுரைக்கு ஒரு டிக்கட் வாங்கிவிட்டான். கமுதிக்கு மானமதுரையில் இறங்கி பஸ்ஸில் போகவேண்டும்.

மானமதுரைக்கு வந்துவிட்டான் மாதவன். பின்பு கமுதிக்கு டிக்கட் கிடைக்கவில்லை. நெடுநேரம் காத்திருந்தும் பிரயோஜன மில்லாமல் போகவே, அன்று மானமதுரையில் தனது பழைய நண்பனெருவன்





வீட்டில் தங்கினன் மாதவன். மறுநாள் மாதவன் கமுதிக்குப் புறப்படுகையில், அந்தப் பழைய நண்பனன சேதுராமன் மாதவனைத் தடுத்துவிட்டான். மாதவன் எவ்வளவோ சலாம் செய்து கெஞ்சியும் மாதவனை சேதுராமன் விடவில்லை. அதன் பலனும் மாதவன் அங்கேயே இரண்டு நாட்கள் தங்க வேண்டிய தாகிவிட்டது. அந்த இரண்டு நாட்களிலும் மாதவன் அடைந்த மனக்கஷ்டத்தைப் பாவம் சேதுராமன் அறிவானு? கல்யாணம் முடித்திருந்தாலல்லவோ தெரியப்போகிறது.

மூன்றாவது நாள் காலையில் போஜராஜன், இல்லை இல்லை மாதவன் கமுதிக்குப் புறப்பட்டான். போகும் போது அவனது மனம் திக் திக்கென்று அடித்துக்கொண்டது "குழந்தை பிறந்ததும் சீக்கிரம் திரும்பிவிடு" என்று கமலா விடம் சொல்லவேண்டுமென்று எண்ணினன். கமலாவிடம், தனிமையில், "குழந்தைக்கு "ஆதவன்" என்று பெயரிடு" என்று சொல்லிவிடவேண்டு மென்றும் எண்ணமிட்டான். ஆனல் கமலாவின் விருப்பம் எப்படியோ?

மாதவனை, ஒருதடவையாவது வந்துபோகும்படி எழுதவேண்டுமென்று கமலாவும் எண்ணிக்கொண்டிருந்தாள். அவளுக்கும் மாதவனின் பிரிவு கஷ்டத்தைக் கொடுத்திருந்தது. சதா மாதவனையே நினைத்துக் கொண்டிருந்தாள்.........

.............மனதில் பொங்கிய ஆனந்தத்துடன் வீட்டுக்குள் நுழைந்தான் மாதவன். அவனுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. அங்கே ஒருவரையும் காணவில்லை. மாதவனுக்குப் பரிச்சயமில்லாத யாரோ ஒருபெண் மட்டும் இருந்தாள். அவசரத்தில் வேறு வீட்டுக்குள் நுழைந்துவிட்டோமா? என்பதைக் கவனித்தான். மாற்றம் இல்லை. அதேவீடு தான்.

"கமலா இங்குதானே......" என்று ஆரம்பித்தான் மாதவன் தடுமாறிய குரலில்.

உடனே அப்பெண், அடியே கமலா என்று கூப்பிட்டாள். அடுத்தக்ஷணம் யாரோ ஒரு பெண்ணும், மாதவனுடைய மாமியாருமாக அடுப்படிப் பக்கமிருந்து வந்தார்கள்.

மாதவனைக் கண்டதும் அவனுடைய மாமியார் ஸ்தம்பித்துவிட்டாள். "இன்னைக்குத் தானு வருகிறீர்கள்!" என்றாள். பின்பு விபரம் சொன்னாள்.

"என்ன! என்ன!" என்று பல்லைக் கடித்தான் மாதவன். அவனது உடம்பு சிலிர்த்

தது. ஆடைக்கோட்டைகள் அதிர்ந்தன. மறு நிமிஷம் அது தூள் தூளாகிவிட்டது. சோகக் குமுறலால் அவனது உடல் ஆடியது.

வேகமாக வீட்டிற்குள் சென்றான் மாதவன். அங்கே கமலா ஒரு குழந்தைக்குத் தாயாகிவிட்டிருப்பதை உறுதிப்படுத்தும் காட்சி தென்பட்டது. குழந்தை ஒரு சிறிய கட்டிலில் கிடத்தப்பட்டிருந்தான். அந்தச் சிசு "ஆதவன்" தான். சிசுவைப் பெற்றுவிட்டு கண்காணுத இடத்திற்குப் போய்விட்டாள் கமலா. காலதேவன் அவளைக்கடத்திச் சென்றுவிட்டான்.

"தந்தி அன்னைக்கே கொடுத்திருந்தோம்" என்று சொல்லியவண்ணம் கண்களைக் கசக்கிக்கொண்டு மாதவனைப்பின் தொடர்ந்தாள் கமலாவின் தாயார்.

"எனக்குக் கிடைக்கவில்லையே" என்றான் மாதவன் நடுக்கத்துடன்; மூச்சு திணறியது; உடம்பு சில்லிட்டது.

"ஏ! மூடப்பதரே! ஒரு இரண்டு மாதத்திற்கு மனைவியைப்பிரிந்து இருக்கச் சகியாமல் ஓடிவந்தாய். இனி உன் ஆயுளிலேயே கமலாவைக் காணமுடியுமா?" என்ற துயர விம்மல் மாதவனுடைய உடலைப் போர்த்தியது. மனதின் பிரகாசங்கள் மங்கி மாய்ந்தன

"மகனே சிறிதும் கவலைப்படாதே!" என்று கம்பீரமாகப் பாடியவண்ணம் சந்நியாசி ஒருவர் வீதிப்பக்கம் சென்றார். அந்தக் குரல் மாதவனுக்குக் கவிதா உள்ளத்தைக் கொடுத்தது. மீண்டும் தொடர்ந்து குணங்குடியாரின் பராபரக் கண்ணிகளைப் பாடிய வண்ணம் அந்தச் சந்நியாசி எங்கோ போய் விட்டார். குரல் மங்கியது. அவருக்கு என்ன கவலை? (மனிதர்கள் விருப்பும் வெறுப்பும் மானிலத்தில் சரியாய் நடப்பதில்லையென்பதை உணரவேண்டும். ப.-ர்)

சுபம் சுபம் சுபம்

---





# மக்கா, மதீனு, பஞ்ச நிவாரணம்

(By : விடத்தல்தீவு, ஏழைகள்தோழன், மு. பி. மீ. முகம்மதுக்காசீம்)

(1)
மக்கா மதினுவில் பஞ்சம்வந்து திரு
மக்களை வாட்டி வருத்து வதால்
திக்கனைத்து முள்ள தீனவரே அவர்
தீனுக் குதவிசெய்ய முன்வந் திடுமின்.

(2)
பாழும் உலகம் யுத்தம் வந்ததினுல் கெட்ட
பஞ்ச அரக்கனும் தான் கிளம்பி
நாளும் கிழமையும் பாராமல் நமது
நாட்டிலும் காட்டிலும் வந்துவிட்டான்.

(3)
வந்து உலாத்தி வசைபேசிப் பஞ்சம்
வங்காளப் பட்டணம் போய்ப் புகுந்து
நொந்து கிடந்த மக்களுக்குப் பசி
நோயைக் கொடுத்துக் கொன்றதுவே.

(4)
மானத்தை நீக்கி யலைந்த பஞ்சம் உயர்
மாதர்கள் கற்பை அழித்த பஞ்சம்
ஈனத்தை யார்க்கு மிழைத்தபஞ்சம் பொல்லா
எமனுக் குடந்தையாய் நின்ற பஞ்சம்.

(5)
இப்படிப் பட்ட எளிய பஞ்சம் எங்கள்
இஸ்லாமிய நாடாம் மக்கா மதினு
எப்படியோ போய்ச் சேர்ந்துவிட்டு அங்கு
என்னமோ கோலம் பண்ணுதே.

(6)
நபிகள் பிரான் பிறந்த மக்காவிலும் அந்த
நாதர் மறைந்த மதினு வினிலும்
கவிகொண் டுரைக்க வொண்ணுத பெரும்
கஷ்டப் படுத்துதாம் பாழும் பஞ்சம்.

(7)
சாதிக் குறைஷீ மக்களுடன் உயர்
சார்ந்த சகாபாக்கள் அன்சாரீ
நீதி முஹாஜிரின் மக்களையும் பிற
நேசரை யெல்லாம் பஞ்சம் வாட்டுகுதாம்.

(8)
நாட்டில் விளைச்சல் மிகக் குறைந்து பிற
நாலா தேச வரத்து இல்லா ததினுல்
அட்டில் சுடவுமா இல்லாமல் மக்கள்
ஓவென் றழுகிறார் முஸ்லிம் சோதரரே.

(9)
ஹக்கன் நபி சறஹை கண்டவரே உயர்
கலிமா மொழி பேசி ஈமான் கொண்டவரே
தக்க இஸ்லாத்தில் வந்தவரே மக்கா
தவிப்பை யகற்ற உதவி செய்திடுமின்.

(10)
ஆயிரம் டன்னுமா அனுப்பச் சென்னை
அன்பர்கள் கூடியோர் சங்க மதாய்
பாயிரம் ஒன்று பேப்பரில் விட்டார் அதை
பார்த்த துண்டோ முஸ்லிம் சோதரரே.

(11)
பார்த்த துண்டானல் பணம் திரட்டி மக்கா
பஞ்சக் கமிட்டிக் கனுப்பி வையும்
சேர்த்து எடுத்து சென்னைக் கமிட்டியார்
செய்வதைச் செய்யட்டும் சோதரரே.

(12)
மக்காவில் ஒன்றுக்கு லட்சம்என்றும் புண்யம்
மதினுவில் ஒன்றுக் கரை லட்சம் என்றும்
தக்க ஹதீது ஷரீபில் வருவதால் நீர்
தாமதம் செய்யாதீர் சோதரரே.

முற்றிற்று.

---

# தலைவிதி

(By: ஷர்புன்னிஸா)

(முன் தொடர்)

**அதிருஷ்டத்துடன் துரதிருஷ்டம்—7**

"அம்மாவின் விசாரம் வீட்டு எஜமானரையும் வாதித்தது. எனக்காக அவரும் பிரமாதமாக முயற்சிகள் செய்தார். முடிவாக எனக்கேற்ற மாப்பிள்ளையென்று ஒருவரைத் தேர்ந்தெடுத்தார். தேர்ந்தெடுக்கப்பட்ட மாப்பிள்ளையைப்பற்றி அம்மா ஒன்றும் கவலை கொள்ளவில்லை; எப்படியும் 'பாரம்' கழிந்தால் சரியென்று இருந்துவிட்டாள். விவாகம் விமரிசையின்றி வீட்டு எஜமானுலேயே நடத்திவைக்கப்பட்டது. எனினும், அம்மா அளவற்ற சந்தோஷத்தோடு காணப்பட்டாள்; அடிக்கடி என்னை அணைத்து முத்தமிட்டாள்! அதிருஷ்டம் வந்துவிட்டதென ஆனந்தக்கூத்தாடி வந்தாள்.

"ஆனால், எதற்கும் ஒரு எல்லையுண்டல்லவா? எனவே, வந்த அதிருஷ்டத்திற்கும் ஓர் எல்லையிருந்ததிலே ஆச்சரியமில்லையல்லவா? விவாகமாகி மாதம் இரண்டு ஆகும் வரை என் கணவர் என்னை மிகப் பட்சமாகவே நடத்திவந்தார். ஆனல், பிறகு தாம் தனது சுயரூபம் இன்னதெனக் காட்டவாரம்பித்தார். குடி, கூத்திகளுடன் தமக்கு எவ்வளவு தூரம் தொடர்பு உண்டென்பதை தெள்ளென விளக்கவாரம்பித்தார்! அம்மா திடுக்கிட்டாள்; நான் விழித்தேன். எனினும், செய்வதென்ன?

"வரவர என் கணவரின் நிலைமை வெகு மோசமாக வாரம்பித்தது. இரவு இரண்டு மணிக்கும் மூன்று மணிக்கும்கூட வருவார்; சில சமயங்களில் சேர்ந்தாற்போல இரண்டு மூன்று நாட்களும் வராமலிருந்துவிடுவார். "கலியாணம் செய்தும் பிரம்மசாரி; கடன் வாங்கியும் பட்டினி" என்ற கதையாயிற்று எங்களுக்கு. மீண்டும், பசி, பட்டினி தலைவிரித்தாடத் தொடங்கின. முடிவாக இதே ஏக்கத்துடன், இவ்வளவு பெரிய உலகிலே ஒரே ஒரு ஆதாரவாயிருந்த அம்மாவும் என்னைத் தனியாக விட்டுவிட்டு அல்லாஹ்வை நாடிச் சென்றுவிட்டாள்.

"கஷ்டம் வரவர வலுத்தது. வேளைக்கு கவளம் அன்னம் என் கணவரால் கிடைக்காவிடினும், அடியும் உதையும் தவறாது நாள்தோறும் கிடைத்தன. விதியே என்று அவ்வளவும் பொறுத்துவந்தேன். ஒருநாள் இரவு 1-மணிக்கு குடி வெறியில் வந்து, "ஏதாவது சமைத்து வைத்திருக்கிறாயா?" என்று அதட்டினர். "வீட்டில் ஏதாவது இருந்தால்தானே சமைப்பதற்கு? அடுப்பில் பூனை படுத்துத் தூங்குவது உங்களுக்குத் தெரியவில்லையா?" என்று மிகவும் பணிவுடன் கூறினேன்.

"அடி ராட்சஸி! பசிக்கு ஏதாவது இருக்கிறதா என்று கேட்டால், பூனை படுத்துத் தூங்குகிறதென்று பரிகசிக்கின்றாயா? சண்டாளி! அவ்வளவு நெஞ்சழுத்தமா உனக்கு?" என்று ரௌத்திரகாரமாய்ச் சீறிக்கொண்டு கழியெடுத்து படீர், படீரென்று மூதுகிலும், மண்டையிலும் இரத்தம் பீரிட்டெழ அடித்துவிட்டு, பரபரவென்று இழுத்து வீட்டிற்கு வெளியே பிடித்துத்தள்ளி கதவைச் சாத்திவிட்டார். எவ்வளவோ கதறியழுதும் கதவைத் திறக்கவில்லை!

"பிறகு தான் எனக்கு எல்லாம் கசந்து ஒரே விரக்தியாகி விட்டது. இப்பாழும் உலகில் வாழ்வதுகூட பெரும் பாபமென் றெண்ணினேன். நான் செய்த கடைசிமுடிவுதான் தாங்கள் முதன்முதலாவதாக என்னை காவேரி நதிக்கரையில் சந்தித்தபோழ்து செய்துகொண்டது! விட்டுத் தள்ளுங்கள்; அதைப்பற்றி இப்பொழுது நினைப்பதிலே என்ன வந்துவிடப் போகிறது? அருமையான அண்ணா ஒருவர் எனக்குக் கிடைத்துவிட்டபின், இந்த உலகிலே வேறு ஒன்றும் எனக்கு வேண்டாம்! ஆனால், என் கணவனைப்பற்றி சில சமயங்களில் நினைக்கும்பொழுதுதான் என் உள்ளம் தெறித்துவிடும்போலிருக்கிறது!" என்று அவள் முடிப்பதற்கும், வண்டி ஸ்டேஷனில் வந்து நின்றதற்கும் சரியாக இருந்தது.

"இறங்குங்கள் அண்ணா! உங்களுடைய ஊர் வந்துவிட்டதே" என்று பெட்டி, படுக்கைகளையெல்லாம் தானே எடுத்துக்கொண்டு இறங்கினள்.



**உலகம் சாற்றிய பழி—8**

"என் வீட்டில் அவள் சகஜமாகப் பழகினள். எனக்குத் தேவையான ஆகார வகைகளையெல்லாம் அவளே தயார் செய்வாள். அவள் எனக்குத் தங்கையாக வாய்த்ததில் எனக்கு அளவற்ற மகிழ்ச்சி! என் தாயார் இறந்த பின், வீட்டில் ஸ்திரீ ஒருவருமில்லாத ஒரே சூன்யமாக இருந்ததை என் தங்கை வந்து சோபை அளித்தாள்.

"அவள் அம்மாதிரி என்னுடன் தனியாகயிருந்ததுபற்றி அக்கம் பக்கத்திலுள்ளோர் தவறுதலாக ஏதேதோ பேசிக்கொண்டனர். அதைப்பற்றி நான் சட்டை பண்ணவில்லை! எங்களிருவரிடை மாசற்ற சகோதரபாசம் இருப்பதை அவர்கள் தவறுதலாக எண்ணிக்கொள்வதினுல் என்னவந்துவிடப் போகிறதென்று நான் வாளாயிருந்துவிட்டேன். ஆனால், அவளுடைய மனதுமட்டும் அதனுல் வெகுவாக சஞ்சலப்பட்டது என்பதை அவள் முகக்குறிகளினுல் எனக்குத் தெரிந்தது. நான் அதைப்பற்றி அவளிடம் ஒன்றும் நேரடியாகச் சொல்லிக்கொள்ளவில்லை.

"ஒரு நாள் காலை 8-மணிவரை காத்திருந்தும், வழக்கம்போல் "பெட் காபி" கொண்டு வரும் அவள், அன்று வரவில்லை. எனக்குத் திக்கென்றது; பரபரப்புடன் வீடு முற்றிலும் தேடிப்பார்த்தேன்; அக்கம்பக்கத்திலும் விசாரித்தேன், ஒரு தகவலும் கிடைக்கவில்லை. என் தலை கிறுகிறுத்தது! பற்பல எண்ணங்கள் தோன்றி மறைந்தன. அவளுடைய அறைக்குள் நுழைந்து பார்க்கும்போது, ஒரு சிறு கடிதம் மேஜைமீது வைக்கப்பட்டிருந்தது. நெஞ்சு பட படவென்று அடித்துக்கொள்ள அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தேன். அதில் கீழ் வருமாறு வரையப்பட்டிருந்தது.

**அன்புள்ள அண்ணு!**

"இக்கடிதத்தைக்கண்டதும் தங்கள்மனம் என்ன பாடுபட்டிருக்கு மென்பதை நான் முன்பே யூகித்துக்கொண்டேன். ஆனால், இதைவிட எனக்கு வேறு வழி தோன்றவில்லை. களங்கமற்ற தங்கள் மீது இப்பாவியால் வீண் அபாண்டம் பரவி விடப்பட்டு அதனுல், தங்கள் மனத்திற்கு வருத்தமளிக்க எனக்கு விருப்பமில்லை. என் தலைவிதி சக்தி மிகுந்தது. கண்ணியத்துடன் வாழ இவ்வுலகிலே எனக்கு இடமில்லை; உலகம் என்னைச் சுமப்பதும் பெரும் பாவமெனக் கருதி

றேன். பிறப்பிலேயே நரன்துர்ப்பாக்கியவதி! பிறந்த பின்பும் என்னை அது விடவில்லை. என்னை உலகில் வாழவைக்கவே தாங்கள் காப்பாற்றிவந்தீர். ஆனால் விதி வேறுவிதமாயிருக்கிறது. எனவே நான்தங்களிடம்விடைபெறுமுன்னமே போகிறேன். என்னைத் தேடும் சிரமம் மேற்கொள்ளாதீர்! இக்கடிதம் காணுமுன் என் ஆத்மா என்னைவிட்டுப் பிரிந்துபோயிருக்கும்."

தங்கள் துர்ப்பாக்கிய "சகோதரி"

படித்து முடித்ததும் நான் அலறினேன்; புரண்டேன்; அழுதேன்; மண்டையி லறைந்துகொண்டேன்; என் செய்வது? எவ்வளவு தேடியும் அவள் அகப்படவில்லை! மூன்றுநாட்கள் கழித்தபின் தெப்பக்குளத்திலே அவளை மிதக்கக் கண்டேன். விதி! அவள் தலைவிதி!,' கண்ணீர்:தாரை தாரையாக வழிந்தோடக் கூறி முடித்தார். கலவரமே உருவாய்க் கொண்ட ரஹூப், "டாக்டர் சாஹிப்! அவளுடைய பெயர் என்ன? பெயர்என்ன?" என்று துடிதுடித்துக் கேட்டான். "அவ் வபாக்கியவதியின் பெயர் முக்தார் பேகம் என்று டாக்டர் கூறியதும், ரஹூப் துள்ளி எழுந்து, "முக்தார் பேகம் அல்லாஹ்வே! அவள் இறந்துவிட்டாளா! டாக்டர் சாஹிப் என்னை மன்னியுங்கள்! நான் பாபி ; மாகாபாபி; நான்தான் அவளுடைய கணவன்! அவளைத் துரத்திவிட்டபின் நான் பட்ட கஷ்டங்கள் அனந்தம்! இறைவனளித்த தண்டனைபோலும்! அல்லாஹ் எனக்குச் சாந்தி யளிக்கமாட்டான்! அப்புண்ணியவதியின் சாபம் என்னை சும்மா விடாது" என்று கதறி யழுது டாக்டரின் கால்களை கட்டி அணைத்துக்கொண்டு கண்ணீர் வடித்தான் ரஹூப்.

**அன்பருக்கு எனது பதில்.**

மலர்-5, இதழ் 11-ல் நான் எழுதி யிருந்த "ஈத் முபாரக்" என்ற சிறுகதை பற்றி அன்பர் A. N. அப்துர் ரஹ்மான் விமரிசிக்கும் போழ்து, சில பகுதிகளைப்பற்றி புகழ்ந்து விட்டு, கதையின் முடிவு இயற்கைக்குப் பொருத்தமல்ல வென்று அபிப்பிராயப் படுகிறார். "கதைக்கு காலுமில்லை; கையுமில்லை" என்பது பழமொழி. "கப்பல் உடைபட்டு கடலில் மூழ்கி கரையேறினான்" என்று கதையில் எழுதப்பட்டிருந்தால், அன்பரின் கூற்றுப்படி, "அவ்வளவு பிரமாண்டமான கடலிலே மீன்களும் முதலைகளும் நிறைந்துள்ள அபாயத்தினின்று எப்படி தப்பித்து கரைசேர்ந்திருக்கமுடியும்?" என்று சர்ச்சிக்க வேண்டியதா யிருக்கிறது. கதையில் வந்த மஜீத் சாஹிபைப் போல் சிற்சில சமயங்களிலே, சிற் சில விடங்களில் இயற்கையாகவே நிகழப்படுவதுண்டு. எனவே, கதையில் குற்றம் கண்டுபிடிப்பது அவ்வளவு உசிதமல்லவென்பது என் தாழ்மையான அபிப்பிராயம்,

—ஷர்புன்னிஸா.





# மண்டைக்கர்வம்

(By: M. K. பீர்முஹிய்யதீன் ராவுத்தர், உத்தமபாளையம்)

சமீபத்தில் நடைபெற்ற காந்தி ஜின்னா சமரசப் பேச்சு உலகப் பிரசித்தமானது. இந்தியர்மட்டுமின்றி வெளிநாடுகளிலுள்ள கோடிக் கணக்கான மக்களும் இச்சமரச சம்பாஷணை வெற்றிபெற வேண்டுமென்று விரும்பினர். ஆனால் தெய்வச் செயலால் சமரச முயற்சி ஒத்திபோடப்பட்டது சம்பாஷணை விபரமும் பத்திரிகைகளில், பத்தி பத்தியாகப் பிரசுரமாகிவிட்டது. இதனைக்குறித்து சாதக பாதகமான அபிப்பிராயங்களும் வெளியாகிக் கொண்டே இருக்கின்றன. ஆனால் மண்டைகர்வங்கொண்ட சிலரது அபிப்பிராயங்கள் தான் இக்கட்டுரையை எழுத எம்மை தூண்டிற்று. சமரசப்பேச்சு இந்தியாவின் தலைவிதியைப் பொருத்தது. ஹிந்து முஸ்லிம் சமூகப் பிரச்னையை முடிவு செய்பவர்களுக்கு இரு சமூகங்களிலும் பிரதிநிதித்துவ அதிகாரம் இருக்கவேண்டும் என்பது மகா முக்கியமானது. ஜனாப்ஜின்னாமுஸ்லிம்களின்மாபெரும் ராஜீய ஸ்தாபனமான முஸ்லிம் லீக் மகா சபையின் தலைவர்; சமரச சம்பாஷணை செய்யுமாறு லீக் தீர்மானத்திற்கிணங்க சம்பாஷணை செய்ய முன்வந்தவர். முஸ்லிம் சமூகத்திலுள்ள யாவருக்கும் ஏகப் பிரதிநிதி. ஸ்ரீ காந்தியும் ஹிந்து சமூகத்திற்கு ஏகப் பிரதிநிதி. இவ்விதமிருக்க ஸ்ரீ காந்தியவர்கள் ஹிந்து சமூக ராஜிய ஸ்தாபனமான காங்கிரஸ் மகா சபையின் அனுமதியின்றி தன்சொந்தஓதாவில்சம்பாஷிக்க ஜனாப் ஜின்னா அவர்களிடம் சென்றார். பின்னும் சம்பாஷணையின் ஆரம்பத்திலேயே ஸ்ரீ காந்தியார் நான் என் சொந்த ஓதாவில் சம்பாஷிக்க வந்தேனேயன்றி காங்கிரஸின் சார்பிலோ ஹிந்து சமூகப் பிரதிநிதி என்ற சார்பிலோ நான் சம்பாஷிக்க வரவில்லையெனத் தெளிவாகச் சொல்லிவிட்டார். தனிப்பட்ட ஒரு மனிதனிடம் ஒரு சமூகத்தின் முடிவைக் குறித்துப் பேசுவது கூடாதகாரியம் என்பது உலகிலுள்ள யாவருக்கும் தெரியாத காரியமன்று.

அப்படியிருந்தும்ஜனாப்ஜின்னாகாந்தியுடன் சம்பாஷணை செய்ய இணங்கியது அவரது பெருந்தன்மையைக் காட்டுகிறது. ஸ்ரீகாந்தியார் சொந்த ஓதாவில் பேசினாலும் அவர் சொல்லைப் பல ஹிந்துக்கள் மதிப்பார்கள் என்ற எண்ணத்தாலேயே இச்சம்பாஷணை மூன்று வாரங்கள் தொடர்ந்து நடைபெற்றது. இல்லையேல் முதல்சந்திப்பிலேயே இருவர்களும் பிரியவேண்டியவர்களே. மேலும் காந்தியார் சம்பாஷணை செய்யப்போவதை யுணர்ந்த சில ஹிந்துக்கள் அவர் ஜின்னாவிடத்திற்குப் புறப்படும் சமயம் அவர் போகக் கூடாதென்று சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கிவிட்டனர். அதையும் மீறிப் புறப்பட்டு ரயில் பிரயாணத்திற்காக ஸ்டேஷன் வந்து சேர்ந்தார். அவ்விடத்திலும் சிலர் கருப்புக்கொடிகள் பிடித்து சம்பாஷணைக்கு செல்லக் கூடாதென்று தங்கள் கண்டனத்தைத் தெரிவித்துக்கொண்டனர். அதையும் மீறிப் புறப்பட்டுவிட்டார். ரயில் பம்பாய் வந்து நின்றது. அவ்விடத்திலும் சில ஹிந்துக்கள் பாகிஸ்தான் எதிர்ப்புக் கோஷங்களிட்டுக்கொண்டு காந்திஜீயிடம் ஓடிவந்தார்கள். அவர்கள் கையில் எதிர்ப்பு எழுதிய போஸ்டர்-கொடிகளும் இருந்தன. பின்னும் அவ்விடத்தில் ஸ்ரீ காந்தியை வரவேற்புச் செய்யவந்த காக்ஸார்கள் சுமார் ஆயிரம் பேருக்குமேல் ஸ்ரீ காந்தியைச் சுற்றி நின்றுகொண்டு பத்திரமாய் அப்பால்நின்ற காருக்கு கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். ஸ்ரீமதி சரோஜினி நாயுடும் கூடக் காரில் ஏறிக்கொண்டு அழைத்த மகான் வீடு செல்லாமல் இரவல் வீடாகிய பிர்லா மாளிகைக்குச் சென்றார்கள். ஸ்ரீ காந்திக்கு பாகிஸ்தான் எதிர்ப்புத் தந்திகளும் சிலர் கொடுத்தனர். இச்சமயம் ஹிந்துக்கள் இந்திய நாடெங்கும் கூட்டங்கள் கூட்டி காந்தியார் பேச்சு ஹிந்து சமூகத்தைக் கட்டுப்படுத்தாது என்று கிளர்ச்சி செய்துகொண்டிருந்தனர். ஒரு சமூகத்தில் எத்தனை செல்வாக்கிருந்தாலும் ஒருவர் கூட தவறாமல் ஆதரிக்கப்படுவர். உலகம் தோன்றிய காலமுதல் இன்றுவரை இருந்ததில்லை. ஒரு சிலரேனும் எதிர்க்கத்தான் செய்வர். இவ்வுண்மையை உத்தேசித்து காந்தியாருக்குஎதிர்க்கட்சியினர்செய்த ஆர்ப்பாட்டங்களை இரு தலைவருமே அலட்சியஞ் செய்தனர். இப்பொழுது இவ்வெதிர்க்

கட்சியைச்சேர்ந்த பிரகஸ்பதிகளுக்கு காந்தியார்மீது ஏற்பட்ட பரிவு அவர்களது மூடத்தனத்தைக் காட்டுகிறது. காந்தியார் உலகம் போற்றும் உத்தமர்; ஹிந்து சமூகத்துக்கு மாபெருந் தலைவர். அவரைத்தேடி அவர் வீட்டுக்கு ஜின்னா வரவேண்டியதிருக்க காந்தியார் சென்றது பரிதாபம். மரியாதைக்காகவும் கூட காந்தி வீட்டுக்கு ஜின்னா வரவில்லை. இனிமேல் இச்சம்பாஷணை மீண்டும் ஆரம்பமானால் ஜின்னாதான் காந்தியிடம் வரவேண்டுமென்று கூறுகின்றனர். இதனினும் கடினமான முறையில் தங்கள் கர்வத்தைக் காட்டிக்கொள்ளுகின்றனர். அவர்களது கர்வ மொழிகளை ஈண்டு கூறி அருமையான இப்பத்திரிகையின் இதழ்களைக் கெடுக்க விரும்பவில்லை. இம்மண்டை கர்விகள் காந்தி சம்பாஷணை ஆரம்பிக்கு முன்னரே காந்தியாருக்கு இந்த உபதேசத்தைச்செய்து அவரை ஜின்னாவீட்டுக்குச்செல்லாமல் நிறுத்திக்கொண்டிருக்கலாமல்லவா! "காந்தியாரே நீவிர் ஜின்னா வீட்டுக்குச்செல்வது ஹிந்துக்களாகிய எங்களுக்கு இழுக்காகஇருக்கிறது. எங்கள் சமூகத்திற்கு அவமானத்தை உண்டாக்காதீர்" என்று அவரைக்கெஞ்சலாமே! இவ்விதம் செய்யாமல் ஸ்ரீ காந்தியார் ஹிந்துக்களின் பிரதிநிதி யல்லவென்று கூறிய அந்த நாக்கில் இன்று இவ்வாறு கூற ஈரமிருக்கிறதா என்று வினவுகிறோம். தவிர காந்தி யாரோ சந்யாசி; சேவாக்கிராம குடிசையில் வாசம் செய்பவர். தினந்தினம் தெய்வப் பிரார்த்தனை செய்தல், உண்ணா விரதம், மௌன விரதம் செய்தல் அந்தராத்மாவுடன் விசாரணை முதலிய தெய்வீக லட்சியங்களைக் கடைபிடித்துத்தொழுபவர். அன்றியும் காந்தியார் வாசஞ்செய்யும் குடிசையும் இரவல். பம்பாயிலும் காந்தியாருக்குச் சொந்த வீடு கிடையாது. பிர்லா மாளிகையில்தங்கியிருந்தார். ஜனாப்ஜின்னாவுக்கோ பம்பாயில் சொந்த பங்களா யிருக்கிறது. இவ்வித நிலைமையில் யார் யாரிடம் போக வேண்டும் என்று யோசித்துப் பாருங்கள். வீடுவாசல் இல்லாமல் இரவலாகத்தங்கியிருக்கின்ற காந்தியார்தான் ஜின்னா வீடு செல்ல வேண்டும். தவிர ஜின்னா அனாவசியமாக மற்றொருவர் வீட்டுக்குச் செல்லலாமா? பிர்லா மாளிகை சொந்தக்காரர் ஜின்னாவை அழைத்தாரா? அழையாத இடத்துக்குச் செல்வது ஜின்னாவுக்கு அகௌரவமில்லையா! என்பதை இவர்கள் உணரவேண்டாமா? இந்தியாவின் கதிமோட்சத்தைக்குறித்து பேச்சு நடத்துகின்ற தலைவர்கள் தங்களுக்கு வசதியான இடத்தைத்தான்முதலில்தேடுவார்கள். இந்த வகையில் ஜின்னா மாளிகைதான் ஏற்றஇடம். ஆதலால் ஜின்னா தமது வீட்டுக்குங்கூட வரலாகாதென காந்தியாரைத் தடுக்காமல் தம் வீடேற்றியது காந்தியாருக்கு கௌரவம் கொடுப்பதல்லவா? இவ்விஷயம் காந்தியாரைக் குறைகூறுபவர்களுக்கு விளங்காமல் போனதேனோ? இத்தகைய மண்டைக் கர்விகள் இருக்கும்போது சமூகப் பிரச்னை சமரசமாகத் தீரவழியுண்டா? இக்குணத்தாலேயே இவர்களது மூதாதையர் அடிமையானார்கள் என்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டாமா? காந்தியார் ராஜகோபாலாச்சாரியார் இயற்றிய திட்டத்தைக் குறித்துத்தான் பேச ஆரம்பித்தார். ஷை திட்டம் சரியான தன்று என்பது தெரிந்திருந்தும் அதனை ஏற்றுக் கொள்ள காந்தியார் கஜகரணம் போட்டுப் பார்த்தார். ஜின்னாவைத்தழுவினார். கழுத்தைப் பிடித்துத் தொங்கினார். அந்தக்கிழட்டு ஜின்னாவிடம் வயோதிக காந்தியார் நான்உங்கள் கழுத்தைப்பிடித்துத் தொங்கட்டுமா என்று கூறியபோது, ஜின்னா ஐயோ நான் விழுந்திடுவேனே என்று பதிலளித்ததையும் கவனியாது காந்தியார் ஜின்னாவின் கழுத்தைப் பிடித்துத் தொங்கியபோது ஜின்னா கீழேவிழாமல் சமாளித்து நின்றுகொண்டிருந்த சமயத்திலும் காந்தியாரின் கபட ஜாலங்கள் ஜின்னாவிடம் செல்லுபடி யாகவில்லை என்பது வெளிப்படையாகவில்லையா? ராஜாஜியின் திட்டம் அங்கீகரிக்கப் படவேண்டும் என்ற முயற்சியில் காந்தியாரின் பாச்சா பலிக்காது என்பது சகல முஸ்லிம்களுக்கும் தெரிந்துவிட்டது. ஆகவே ராஜாஜியின் திட்டம் காற்றில் பறந்த பதர்போல் ஆகிவிட்டதென்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

மனதுள் கபடத்தையும் மண்டையில் கர்வத்தையும் வைத்துக்கொண்டு முஸ்லிம் சமூகத்தை அண்டுவது முட்டாள் தனம் என்பதை இனியேனும் கர்விகள் உணர்ந்து களங்கமற்ற மனத்துடன் முஸ்லிம்களை அணுகி எல்லோரும் இன்புற்றிருக்கவேண்டும் என்ற கொள்கையை இவர்கள் கடைப்பிடிக்காத வரையில் இந்தியாவில் உண்மைச் சமாதானம் ஏற்படும் என்பதைக் கனவிலும் கருதவேண்டாம்.

---

# இஸ்லாத்தின் அரசியல் கொள்கை - 10

(By: MOULANA MAUDOODI)

## றைவரம்பின் நோக்கம்.

உதாரணமாய் மனித வாழ்க்கையை எடுத்துக் கொள்ளுவோம். இதில் அல்லாஹுதஆலாவானவன், மனிதர்க ரில் பிரத்தியேக சொந்த பாத்தியதை என் ம், ஏழைவரியான ஜக்காத் கொடுக்கவேண்டியது கடமையாகுமென்றும், வட்டி வாங்குதல் ஆகாக் காரியமென்றும், சூது விளையாடுதல் விலக்கப்பட்ட தென்றும், சொத்துரிமை சட்டமுண்டென்றும், பொருள் திரட்டுவதற்கும் அதைச் செலவு செய் வதற்கும் சில சட்டதிட்டங்கள் உண்டென் றும் ஒரு சில வரம்புகளை ஏற்படுத்தி யுள்ளான். எனவே, மனிதர்கள் குறிப்பிட்ட அல் லாஹ்வின் இவ்வேற்பாட்டை உறுதியாய்க் கைக்கொண்டு, அவ் வரம்புக்குள்ளேயே இருந்து தங்களது கிரியைகளைச் செய்து கொண்டு வருவார்களாயின், ஒருபுறம் மனி தர்கள் தனிப்பட்ட தங்கள் உரிமைகளைப் பெற்றவர்களாய் (Personal Liberty) சமை கின்றனர். மற்றொரு புறமோ, வர்க்கச் சண் டை (Class War) ஒரு சமூகத்தின்மீது மற்றொரு சமூகத்தார் அநியாய, அக்கிரம ஆட்சி புரிவதென்பதும் உண்டாகாது. இந்த த்தம் அக்கிரமக்கார முதலாளிகள் மூலம் ஆரம்பமாகி தொழிலாளிகளுடைய சர்வாதி காரத்துவத்தின் (Dictator ship) மீது வந்து முடிவாகின்றது. மேற்கண்ட அல்லா ஹ்வின் சட்டதிட்டங்களை அப்படியே கைக் கொள்ள முனைந்தவர்கள் இத்தகைய ஆபத் தினின்றும் தப்பித்துக் கொள்வார்கள்.

இதே முறையில் அகவாழ்க்கை (family life) விஷயத்தில், ஆண்டவன் மார்க்க சம் பந்தமான பர்தா முறையையும், ஆடவர்க ளின் மேன்மையையும் சதிபதி சந்ததியார் முதலியோரின் பாத்தியதைகள் எப்படிப் பட்டவை யென்றும், சதிபதிகளுக்கிடையே டக்கும் விவாக விலக்கு சம்பந்தமான சட்டங்களையும், பலதார விவாக சம்பந்தப் பட்ட விவாக அனுமதியையும், வியபிசாரம் படர்மொழி போன்றவைகளுக்கான தண்ட னையையும் ஏற்பாடு செய்து மனிதர்களுக்கு ன்மை செய்ய நாடியுள்ளான். எனவே, மக் கள் இவற்றை ஆழ்ந்து கவனித்து, இவ்வரம் புக்குள்ளேயே இருந்து, தங்களுடைய அக வாழ்க்கையை உறுதியுடன் நடத்திச் செல் லுவார்களாயின், இவர்களின் இல்லங்கள் அக்கிரமமும், அநியாயமும் நிறைந்த நரக வேதனையாய் சமையாது. அன்றியும், தற்கால நாகரிகமென்றும் மனித வாழ்க்கையையே நாசப்படுத்திக் கொண்டிருக்கும் பெண்களின் கட்டுக்கடங்கா உரிமை யெனும் சுயேச்சைச் சுழலும் உண்டாகமாட்டாது. பின்னர் தற்சமய உலகம், பெண்களின் காரணமாய் இத்தகைய முறையில் தத்தளித்துக்கொண்டிருக்காது.

இங்ஙனமே மனிதர்களில் நாகரிக வாழ்க்கையின் பாதுகாப்புக்காக அல்லாஹுதஆலா பழிக்குப் பழிவாங்கும் சட்டத்தையும், களவுக்குக் கரங்களைத் துண்டிக்கும் தண்டனையையும், மதுபான மருந்தவது ஆகாதென்பதையும் மனிதர்கள் மானத்தை மறைக்கவேண்டிய வரம்புகளையும் எடுத்துக் காட்டி, கலகங்களும், புரட்சிகளும் உண்டாகும் வாயில்களை யெல்லாம் நிரந்தரமாய் அடைத்துவிட்டிருக்கிறான். மேற்குறிப்பிட்ட அல்லாஹ்வின் வரம்புகளை யெல்லாம் பரிபூரணமாய், அதிக விளக்கமாய் ஒவ்வொன்றையும் தனித்தனியே யான் எடுத்துக் காட்ட முற்படவில்லை. சுருங்கக் கூறின், ஆண்டவன் மேற்குறிப்பிட்ட வகையில் தனிப்பட்டதும், மாற்றத்திற்கும், திருத்தத்துக்கும் இடமளிக்காததுமான ஒரு திட்டத்தை (Constitution) மனிதர்களுக்குக் கொடுத்திருக்கிறான். அச்சட்டம் மனிதர்களின் உண்மையான சுயேச்சையையும், அவர்களுடைய சிந்தனா சக்தியையும், புத்தியையும் வீணாக்குவதாயில்லை. ஆனால், அவர்களுக்காக இச்சட்டம் பரிசுத்தமான, தெளிவான, நேரான ஒருபாதையையே எடுத்துக்காட்டுகிறது. என்னெனின், அவர்கள், தங்களறியாமையாலும், பலஹீனங்களின் காரணத்தாலும் அழிந்துபோகும் பாதையின் பக்கல் செல்லாம லிருப்பதற்காகவும், அவர்களின் சக்திகளெல்லாம் தவறான வழியில் வீணாகாம லிருப்பதற்காகவும், மேலும் அவர்கள், தங்களுடைய உண்மையான ஜெயத்தையும், முன்னேற்றப்படியையும், நேரிய முறையில் பெருக்கிக் கொள்வதற்காகவும் என்றுணர வேண்டும்.

நீவிர் உயர்வான மலைப்பகுதியின் பக்கல் போகக்கூடிய சந்தர்ப்பம் கிடைத்திருப்பின், ஒரு விஷயத்தை யுணர்ந்துகொண் டிருப்பீர்கள். அதாவது மலைப்பாதைகளில் ஒருபுற ஓரம் அதிக ஆழிய பள்ளத்தாக்காய் காணப்படும். மற்றொரு புறமோவெனின், மலைக்குரிய மேட்டின் உயரம் தென்படும். இத்தகைய பாதைகளில் ஓரத்தில் சரியான தடுப்புக் கற்கள் அமைக்கப்பட்டிருப்பதை நீவிர் காணலாம். இப்பாதுகாப்புக் கற்கள் அமைக்கப்படாவிடின், பிரஸ்தாப இப்பாதையில் நடந்துசெல்லும் பாதசாரிகள் தவறுதலாய் பள்ளத்தாக்கில் வீழ்ந்து விடவும்கூடும். இத்தகைய பாதுகாப்பு பாதசாரிகளின் சுயேச்சையைப் பறிப்பதாகுமா? இல்லை. உண்மையில் அப்பாதசாரிகள் ஆபத்துக்காளாகாமல் தப்பிக்கொள்வதற்காகவே இக்கற்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன. இங்ஙனமே, வளைவுபடப் போய்க்கொண்டிருக்கும் பாதையிலும் அடையாளமிட்டிருப்பதை நீங்கள் காணலாம். அக்குறிப்புகள் ஒவ்வொரு வண்டியும் சர்வ ஜாக்கிரதையாய்க் குறிப்பிட்ட வண்ணம் கோணலாய் அமைக்கப்பட்டிருக்கும் நேரிய பாதையில் செல்ல வேண்டுமென்பதே இக்குறியின் கருத்தாகும். ஆகவேஇக்கருத்துக்கொப்பவே மேலே சொல்லிக் கொண்டுவந்த அல்லாஹ்வின் வரம்புகளும் சட்டதிட்ட உபதேசங்களும் மனிதர்களுக்காக நிர்ணயிக்கப்பட் டிருக்கின்றன.

அல்லாஹ்வின் வரம்புகள், மனிதர்களுடைய வாழ்க்கைப் பிரயாணத்திற்காகச் சரியான பாதையைக் காட்டுகின்றன. சங்கடமான சமயங்களில் மனிதர்கள் நேர்மையாய் நடக்கும் முறையைப் போதிக்கின்றன. எனவே, அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்ட திட்டங்கள் மார்க்கத்திற்கும், திருத்தத்திற்கும் அப்பாற்பட்டதாகும். நீங்கள் நினைத்தால் துருக்கியரைப் போலவும், ஈரானியரைப் போலவும் இத் திட்டத்திற்கு விரோதமாய் புரட்சியை உண்டு பண்ணலாம். ஆனால், அதை மாற்றி விடுவதென்பது முடியாது. இறைவனின் சட்டம் இறுதி நாள்வரை அசைக்கமுடியாத் திட்டமா யிருக்கிறது. இஸ்லாமிய அரசாங்கம் ஏற்படுமாயின், இதே திட்டத்துடன் தான் ஏற்படப் போகிறது. அல்லாஹ்வினால் அருளப்பட்ட குர்ஆன் வேதமும், அவனது சத்தியத் தூதராம் முஹம்மது (ஸல்) அவர்களின் மார்க்கமும் உலகில் நிலைத்திருக்குமட்டும் ஆண்டவனின் இச்சட்டத்தை ஒருமுறையாவது அதனிடத்திலிருந்து அகற்றிவிடலாமென்பது முடியவே முடியாது. முஸ்லிமாக இருக்க விரும்பும் ஒவ்வொருவரும் இச்சட்டதிட்ட முறைகளுக்குக் கட்டுப்பட்டு நடந்தே தீர வேண்டியவர்களா யிருக்கின்றனர். (வரும்)





# முஸ்லிம்களின் மத்திய காலக் கலாஞானம்

(By : ஜனாப் வ. மி. ஷம்சுத்தீன்).

"நீங்கள் அறியாதவற்றை அறிவித்தவன், எழுது கோலால் எழுதக் கற்பித்தவன்," (குர் ஆன் வாக்கியங்கள் 17-14; 96-1; 69-91) என்ற குர் ஆனின் போதனைகள் முஸ்லிம்களை எழுதவும் படிக்கவும் கற்பிக்கின்றன. குர் ஆனுடைய வேத அறிவிப்பானது அரபியர்களை மாத்திரம் அறிவு பெறத் தூண்டவில்லை. கல்வியைப்பெற பல வழிகளையும் காட்டி யிருக்கிறது. ரசூலே கரீம் (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் வந்த 25-வருடங்களுக்குள் அரேபியாவானது முஸ்லிம்களின் கலாஞானத்துக்கு உறைவிடமாக அமைந்துவிட்டது. குர் ஆனை மனனம் செய்வதிலும், வாசிப்பதிலும், நகல் செய்வதிலும் அரபியர்கள் வெகு சுறுசுறுப்பாக யிருந்தார்கள். நிகழ்காலங்களைப்பற்றி எழுதும் சரித்திராசிரியர்களுக்கு முஸ்லிம்களின் கலாஞான எழுச்சி அதிக ஆச்சரியத்தைக் கொடுத்தது. முஸ்லிம்களின் விஞ்ஞான வளர்ச்சிக்குப் போதிய மூலாதாரங்கள் இல்லாதபடியால்தான், முஸ்லிம்களின் விஞ்ஞானக்கலை அதிகம் பரவவில்லை என்று நம்பப்படுகிறது. 1907ம் வருடம் மாணவர்களின் கல்வியைப்பற்றிய சர் நூஜியின் பிரசுரங்களுக்குப் பிறகுதான், இதன் தன்மை ஐரோப்பிய கலாவல்லுனர்களுக்கு விளங்கிற்று. இது சம்பந்தமாக பல நூல்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன. "தாக்கீரத் அஸ்-ஸாமியுல் அல்-மின்ஹாஜ்," "இஸ்லாமி-நிஜாமி தாலீம்," இன்னும் இவைபோன்ற பல நூல்கள் இந்தியாவில் வெளியிடப்பட்டிருப்பதானது, திட்டமாக முஸ்லிம்களின் கல்வித் தன்மையை நல்ல அளவுக்கு விருத்தியடையச் செய்திருக்கின்றன வென்றாலும், அந்நூலாசிரியர்களில் ஒருவராவது, முஸ்லிம் கலாவல்லுனர்களின் சரியான கலாஞானக் கோட்பாடுகளை எடுத்துச் சொல்லவில்லை. ஆகவே, முஸ்லிம்களின் கல்வித் தன்மையைப்பற்றி ஆழ்ந்து கவனிக்குமுன், அரபியர்களின் விஞ்ஞானக் கல்வியைப்பற்றி இங்கு சொல்லவேண்டியது அவசியமாகக் காணப்படுகிறது.

முஸ்லிம்கள் விஞ்ஞானக்கல்வி வளர்ச்சிக்குச் சிறிதுதான் ஆக்கங்காட்டி யிருக்கின்றார்கள் என்று நம்பப்பட்டபோதிலும், முஸ்லிம்களின் சிறந்த புலமைத்தனம் இதற்கு விரோதமாகக் காணப்படுகிறது. ஸஹீ புகாரீ, முஸ்லிம், அபூதாவூது, திர்மதி போன்ற நூல்கள் இது சம்பந்தமாக நல்ல விஷயங்களை வெளிப்படுத்தி யிருக்கின்றன. இந்நூல்களிலுள்ள, அத்தியாயங்கள் கல்விப் பெருக்கத்துக்கு மிக்க ஊக்கமளிக்கின்றன. "ஜாமி பயானுல்-இல்ம்" என்ற பெயரால், ஹிஜ்ரீ 463-ம் வருட ஆரம்பத்தில் ஹாபீஸ் இப்னு அப்துல் பாரி என்பவர் ஒரு புத்தகமெழுதி தனிப்பட்ட முறையில் முஸ்லிம்களின் கலாஞானத்துக்குரிய தன்மைகளை ஆராய்ச்சி செய்திருந்தார். மஹம் ஸானி அல்-அஷ்காரி என்பவரால் இதற்கு பொழிப்புரை செய்யப்பட்டது. முஸ்லிம்களின் விஞ்ஞானக் கல்விகளை விட அதிகமாக, மேற்கூறப்பட்ட தன்மையுள்ள நூல்கள் திரட்டப்பட்டு உலமாக்கள் முன்பு சமர்ப்பிக்கப்பட்டன. மத நம்பிக்கைக்குரிய மத நம்பிக்கையற்ற, சட்ட பூர்வமான, சட்ட பூர்வமற்ற விஷயங்களைக் கொண்டதும், உபாத்தியாயர்கள் பள்ளி மாணவர்களைப்பற்றிய விஷயங்களைக் கொண்ட ஒரே நூல் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களால் ஆக்கப்பட்ட "இஹ்யா-உல் உலூம்"; மற்றொன்று "முகத்தமா" என்பதாகும். அஷ்-ஸம்ஹாதி எழுதிய "ஜவாஹிருல் அல் இக்தியான்" என்ற நூலும், "இஹ்யா-உல்-உலூம்" போல் மேற்கூறிய விஷயங்களைத் தழுவியிருக்கிறது. ஆனால் பாடம் கற்பிக்கும் முறை அதில் சொல்லப்படவில்லை. விஞ்ஞான வளர்ச்சிக்காக, புர்ஹானுத்தீன், சர்நூஜீ, காஜி பதுருத்தீன் இப்னு ஜமா ஆகிய நூலாசிரியர்கள்தான் பாடுபட்டார்கள். "தாலிமுல்-முத்தஹலீம்" என்ற நூலை சர் நூஜியும், "தாக்கீத்-சாமி" என்றநூலை இப்னு ஜமாவும் எழுதியிருக்கிறார்கள். இதில்கல்வியைப்பற்றியும், பண்டிதர்களின் தன்மையைப் பற்றியும்மாத்திரம்விளக்கப்படவில்லை. கல்வியின் பிரிவுகள், போதனை முறைக்குரிய பாடங்கள் கல்வியை மாணக்கர்களுக்குப் போதிக்கும் கோட்பாடுகள் முதலியவைகளையும் எழுதியிருக்கின்றார்கள். சர்நூஜி ஹனபி மத்ஹபைப் பின்பற்றியவர், இப்னுஜமா ஷாபி மத்ஹபைப் பின்பற்றியவர்; ஸர்நூஜி ஹனபி மத்ஹபைத் தழுவியவர்களான இமாம் அபூ

ஹனீபா, அபூயூசுப்,முஹம்மதுபின் ஹஸன், அஸ்ஸாஹிபானி 'ஹிதாயா' ஆசிரியர் புர்ஹானுத்தீன், நஜ்முத்தீன் அன்-நஸபீ ஆகியோர்களின் வாக்கியங்களைத் தன்னுடைய நூலில் மிகுதம் கையாண்டு இருக்கிறார். ஆனால், இப்னு ஜுமா ஷாபி மத்ஹபைத் தழுவியவர்களான முஹம்மது பின் இத்ரீஸ், அஸ்-ஷாபி அல்-ஹுமாதி, ஹாதி ஹுசேன் பின் முஹம்மது அஷ்-ஷாபி, இமாம் அல்-கஸ்ஸாலி முதலியவர்களின் வாக்கியங்களை அதிகம் கையாண்டிருக்கிறார். என்றாலும் இருவர்களும் கல்வி சம்பந்தமான முறையில் வேற்றுமைப்பட்டிருப்பது இதில் விசேஷமாகும்.

இவ் விருவர்களும் வேற்றுமை காட்டியிருக்கும் இடங்களைக் குறித்து பிறகு கவனிப்போம். இவ்வேற்றுமைகள் கல்வியின் கோட்பாடுகளைப் பற்றித்தான். இவ்விருவர்களின் காவியங்களை நாம் ஒத்திட்டுப் பார்க்கும்போது கல்வியைப்பற்றிய அம்சங்கள் இன்னும் விசேஷமாகக் காணப்படும் சர்நூஜி எழுதிய "தாலிம்-அல்-முத்தாலீம்" என்ற நூலைப்பற்றிய விரிவுரை, "இர்ஷாதுல்-காஷித்-இலாஅஸ்னு மகாஷித்" என்ற நூலை எழுதிய இப்னு-செயித், ஆகிய இரு நூல்களும் ஹனபியாக்களின் கொள்கைகளை இலேசாக வெளியிட்டிருக்கின்றன. இமாம் கஸ்ஸாலி (ரஹ்) எழுதிய "எஹ்யா உல் உலூம்" நவவி எழுதிய 'முகத்தமா' இப்னு கல்தூன் எழுதிய 'முகத்தமா' ஆகிய நூல்கள் ஷாபியாக்களின் கொள்கைகளைப் பற்றி மிகவும் தெளிவுபடுத்துகின்றன. எமன் தேசத்துப் புலவரான முஹம்மது பின் அலீ-அஷ்ஸாக்கானி அஷ்-ஸாபி என்பவர் ஹிஜ்ரீ பத்தாவது நூற்றாண்டில் 'அதப்-அத்-தாலிப்-வ-முந்தஹா அல்-அரப்' என்ற நூலை எழுதினார். அது பள்ளி மாணவர்களுக்கு வழிகாட்டியாகும். இவர் மாணாக்கர்களை 4 பிரிவாகப் பிரித்திருக்கின்றார். (1) இமாம்களாக வர எண்ணுகிறவர்கள் (2) தன்னுடைய தொழிலுக்காக ஒரு எல்லைக்குள்பட்ட பிடிப்பை விரும்புகிறவர்கள், (3) ஜன சமூகத்தின் நன்மைக்குப் பாத்திரமானவர்களாக வரக்கூடியவர்கள் (4) விஞ்ஞானம், சிற்பம், தத்துவம், முதலியவற்றில் தேர்ச்சி பெற விரும்புகிறவர்கள். இம்மாதிரி பிரிவினை செய்து அறபிமொழி மூலமாக முஸ்லிம்களின் கலாச்சாரத்தைக் கற்றுக் கொள்ளவும் திட்டம் வகுத்துள்ளார். அவர்கள் தொழில்களில் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதையும் காட்டியிருக்கின்றார்.

இதுபோக இம்முறைகளைப்பற்றி மற்றும் முஸ்லிம் உபாத்தியாயர்கள் எழுதிய மற்றும் நூல்களும் நமக்கு உதவியாக யிருக்கின்றன. இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்களால் ஆக்கப்பட்ட "கித்தாபுத்தஅலீம்-வல்-முத்தலீம்" என்ற நூல் இதற்கு உதாரணமாகும். இந்நூல் வினா-விடைபோன்ற நடையில் எழுதப்பட்டிருக்கிறது. ஹிஜ்ரீ மூன்றாவது நூற்றாண்டிலுள்ள, ஷியா வகுப்புப் பிரசாரகரான, ஜாபர் இப்னு மன்சூர் அல்-எமனீ மேற்கூறிய நூலைப்போன்று ஒரு நூல் எழுதி யிருக்கின்றார். அஸ்ஹாரி வகுப்புத் தன்மையைப் பற்றியும் மத்ஹபு மாற்றுதலைப் பற்றியும் எழுதி யிருந்தபோதிலும், இந்நூல் அவர்களுடைய மத்ஹபுகளுக்கு ஜனங்களை இழுக்க அத்துணை உதவி செய்யவில்லை. ஒரு மாணவன் கலாசாலைக்குப் போனவுடன் முதலில் உபாத்தியாயர்களிடம் கேள்விகளைப் போடவேண்டும். ஒவ்வொன்றுக்கும் பதில் சொல்லி முடிந்ததிலிருந்து, உபாத்தியாயர்களின் நிலைமை தெரிந்து அவருடைய நம்பிக்கைக்கு மாணாக்கன் பாத்திரமாகி அவரை ஒத்துக்கொள்ளவேண்டும். இது பாத்திமி பள்ளிக்கூடங்களிலுள்ள முறைகளாக யிருந்திருக்கக் கூடும். "தாருல் உலூம்" பாரசீக, கிரேக்க நாடுகளின் வழியைப் பின்பற்றி அரசியல் தன்மையை விளக்கிற்று.

# சந்தா சோதரர்கள் அறிக!

நமக்குக் கடிதங்களும், சந்தாதோகையும் அனுப்பும் நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரையும், விலாச விவரங்களையும் தெளிவாகக் குறிப்பிடல் அவசியம். அவ்வாறில்லாமல் வரும் கடிதங்கள், மணியார்டர்கள் தாமதமாகவே கவனிக்கப்பட நேரிடுகின்றன,

—மானேஜர்: "நூ. இ."



கிழக்கும் மேற்கும் சந்தித்துவிட்டாலும்

# ஹிந்துவும் முஸ்லிமும் ஒன்றித்துப்போக முடியாது

(By : "குலாம்")

'கிழக்கும் மேற்கும் சந்திக்காது' என்று முன்னர் யாரோ சொல்லிப்போனார்; அது பொய்ப்பட்டது என்று முன் கட்டுரையில் கண்டேன். இதை, இந்த உண்மையை மறுப்பவர்கள் இல்லையென்ற நம்பிக்கையால் இதை நிரூபிப்பதற்கென்று (இன்னமும் மாதத் தாளாகவே இருக்கும். நூ. இ. ல் அதிகப் பக்கங்கள் கிடையாததால்) மேற்கொண்டு எழுதவில்லை என்றாலும் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றே-ஒரு சமூகத்தினரே, ஹிந்து முஸ்லிம் பிரச்னையே ஏற்படவில்லையென்று நீங்கள் பிரசாரம் செய்து வருவதால் அதைப்பற்றி விசாரிப்போம்.

கிழக்கையும் மேற்கையும், அதாவது வெள்ளையனையும், (ஆளப் பிறந்ததாகக் கொள்ளும் ஐரோப்பிய அமெரிக்கனையும்,) ஆளப்பட-அடிமையாக இருக்க சிருஷ்டிக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படும் கருப்பன் மாநிறத்தோனையும் சந்திக்கச் செய்தது என்ன? இஸ்லாம். காந்தியாரே இந்த உண்மையை ஒப்புக்கொண்டிருப்பதாலும், எவரும், பாக்கிஸ்தான் எதிரிகளாகிய நீங்களும்; மறுக்கமாட்டீர்கள் என்று நினைப்பதால் இதைவிட்டு மேலே செல்லுவோம். நீங்கள் இந்த உண்மையை மறப்பதானால் தக்க ஆதாரங்களுடன் நிரூபிக்கக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

'Hindu and Muslim Will Not Meet':—ஹிந்துவும் முஸ்லிமும் சந்திக்க முடியாது என்றதை நிரூபிக்க முன்காட்டிய ஆதாரமே போதுமானது. அதாவது, நாம் முஸ்லிம்கள், ஒரு சிலர், சிறுபான்மையினர், பலகோடி ஹிந்துக்களிடையில் சென்ற ஒன்றல்ல, பத்தல்ல, நூறல்ல, ஐந்நூறல்ல, ஒரு ஆயிர வருஷங்களாக வாழ்ந்துவந்தும் ஹிந்து-60 கோடி ஹிந்தும் இந்த ஒரு சிறு எண்ணிக்கையாக இருந்த முஸ்லிம்களைக் கவர்ந்து கொள்ளவில்லையானால், கவர்ந்து கொள்ளும் முறையில் நடந்துகொள்ளவில்லையானால், கவர்ந்துகொள்ள சக்தி பெற்றிருக்கவில்லையானால், அப்பொழுது; ஒரு சில நூறு, அல்லது ஆயிரக்கணக்கில் இருந்த முஸ்லிம் இன்று 10கோடி மக்களாகப் பெருகிப் போனபிறகு, முன்னைவிட 4ல் ஒரு பங்காகக் குறைந்துபோன ஹிந்துக்கள் கவரமுடியுமா? என்பதே.

(88-ம் பக்கத் தொடர்ச்சி)

மேற்கூறிய விஷயங்களிலிருந்து அந்நூலாசிரியர்கள், முஸ்லிம்களின் கல்வி விஷயத்தின், ஒத்துப்போகும் தன்மையில் சில அபிப்பிராய பேதங்களுடனிருந்தார்கள் என்று தெரியவருகிறது, கல்வியின் முக்கிய அம்சங்களில் மாத்திரம் அவர்கள் வித்தியாசமான எண்ணங்கள் கொண்டிருக்கவில்லை. போதனு முறைகளைப்பற்றியும் வித்தியாசமான முறைகளைக் கையாண்டார்கள்.

முஸ்லிம்களின் கல்வியைப்பற்றி எல்லா அம்சங்களையும் சேர்த்துப் பார்த்தால், இஸ்லாத்தின் ஆரம்பகால முதல் பனூ உமையாக்களின் ஆட்சி முடியும்வரை, குர்ஆனின் தத்துவம், பரிசுத்த வரலாறுகள், அரபி, மொழி, கவிதை, கணிதம், ஆகியவைகள் முஸ்லிம்களின் கல்விக்குரிய திட்டங்களாகயிருந்தன என்று தெரியவரும். இக்காலங்களில், உபாத்தியாயர்கள் பிரசங்கங்கள் மூலமாகவே பள்ளி மாணவர்களுக்கு விஷயங்களைப் புகட்டினார்கள், உபந்நியாசம் செய்வோர்கள், தங்களுக்கு அவ்விஷயங்கள் எப்படிக் கிடைத்தன, யார் மூலமாகக் கிடைத்தன என்பதை விளக்கவேண்டும். பனூ உமையாக்கள் ஆட்சி காலத்தில் இம்முறை கையாளப்பட்டது. அதிகாரிகள் இதில் கலந்துழைத்தனர். பனூ அப்பாசியாக்கள் ஆட்சி வரையினும், மாணக்கர்களுக்கு வாயால் சொல்லிக்கொடுக்கும் முறையும், வாசகத்தை எழுதிப் படிக்கச்சொல்லும் முறையும் கையாளப்பட்டன. அதுகாலை, ஷாபி, ஹனபி மத்ஹபு சம்பந்தமான கல்லூரிகள் தர்க்க ரீதியாக அமைக்கப்பட்டன. அப்போது தான் உபந்நியாசங்களை எழுத்து மூலமாகச் செய்யும் முறை கைக்கொள்ளப்பட்டது.

(தொடரும்)

பலாத்கார முறையில், காங்கிரஸ் ஆட்சியில் கைகொண்ட பலாத்காரம், சூழ்ச்சி, பஞ்சதந்திரம் முதலிய முறைகளைக்கொண்டு முஸ்லிம்களை அடக்கி ஹிந்துவாக்கிவிடலாம், அல்லது நசுக்கிவிடலாம், அல்லது விரட்டிவிடலாம் என்றெல்லாம் நீங்கள் திட்டம் வகுத்திருந்தீர்கள், இருக்கின்றீர்கள். ஸ்பெயினிலிருந்து முஸ்லிம் ராஜ்யத்தை மட்டுமல்ல, முஸ்லிம் பூண்டே இல்லாதபடி அக்கால கிறிஸ்தவர்கள் செய்ததுபோல் இங்கேயும் செய்துவிடலாம் என்பது உங்கள் திட்டம். நீங்கள் இதை மறுக்கலாம்; இப்படி திட்டம் ஒன்று வகுத்ததில்லை, வகுத்தில்லை என்று. எங்கள் பிரசாரத்தில், எங்கள் ஸ்டேட்மென்டுகளில் இப்படி ஒன்றும் காண்பிக்கமுடியாது என்று நீங்கள் எதிர்வாதம் செய்யலாம். ஆனால் உங்கள் சோதரர்கள், ஆரிய (சமாஜிர்கள், ஹிந்து மகாசபையினர் இந்த உங்கள் திட்டத்தை மறைத்துவைக்கவில்லை. அவர்களுக்குண்டாகும் ஆவேசத்தில் உங்கள் திட்டங்களை, மேற்கண்ட சூழ்ச்சிகளை, அடிக்கடி பஹிரங்கமாகச் சொல்லியும் எழுதியும் வருகின்றதை நீங்கள் மறுக்கமுடியாது. அவர்கள் வேறு, நாங்கள் அவர்கள் கட்சியைச் சேர்ந்தவர்களல்லவே என்றெல்லாம் நீங்கள் மழுப்பலாம். ஆனால் முஸ்லிம்கள் கண்விழித்துக்கொண்டிருக்கின்றனர்.

ஸ்பெயினில் அப்படி நடந்தகாலம் வேறு; இப்பொழுது இந்திய முஸ்லிம்கள் இருக்கும் நிலைவேறு. எல்லாப் புகழும், நீங்களும் நாங்களும் வணங்கும், அல்லாஹ்வாகிய பரமேஸ்வரனுக்கே, எங்களுக்கு ஒரு In Corruptible, அசைக்கமுடியாத நடுநிலைமை கொண்ட நிதானந்தவறாத ஒரு வழிகாட்டியைக் கொடுத்தருளியதற்காக முல்லாக்கள் அதாவது ஸாஸ்திரிகள், ஆச்சாரிகள், பண்டிதர்கள் இவர்கள் செல்வாக்கில் அக்கால முஸ்லிம் அரசர்கள் இருந்தார்கள். இதை ஒட்டியே, 'எதாராஜா, ததாப்பிரஜா' என்றதுபோல் மக்களும் முல்லாக்கள் ஆதிக்கத்தில் இருந்தனர். இதன் பலனாக இஸ்லாத்தின்மேல் தூசி படிந்து அது பிரகாசிக்காமல் இருந்தது. இதன்பலனாக முஸ்லிம் அரசர்களும், அவர்களைப்பின் பற்றினோரும் குடியிலும் கூத்தியிலும் இறங்கி இஸ்லாத்தை மறந்திருந்தனர். இதன்பலனாகவே தான் ஸ்பெயினில் மட்டுமல்ல எங்கும்—இந்தியாவிலும்கூட-முஸ்லிம் ஆட்சி சீர்குலைந்தது. இதன் பலனாக நாங்கள் இதுகாறும் பிரக்ஞை இழந்து இருந்தோம், இப்பொழுது விழித்துக் கொண்டுள்ளோம் என்பதை நிரூபிக்க முல்லாக்கள் கூட்டமாகிய 'ஜமீயத்துல் உலமா-ஏ-ஹிந்த்' என்னும் அகில இந்திய முஸ்லிம் சாஸ்திரிகளின் பலம் பொருந்திய பிடியிலில்லாமல், பூட், ஹாட், கோட் அணியும் ஒரு In Corruptible 'சத்தியமே ஜெயம்' என்ற நம்பிக்கை கொண்ட ஒரு மெலிந்த உயர்ந்த மனிதனே போதும் என்று நிற்கின்றோம் :என்பதே போதுமானதாகும். ஆகையால், ஹிந்து சோதரப் பெரியோர்களே! நீங்கள் ஸ்பெயின் சரித்திரம் திரும்பவும் இங்கு நடக்கும் 'History will repeat Itself' என்ற (மூட) நம்பிக்கையிலிருந்து விழித்து Face Facts, Hard Facts விஷயத்தை உள்ளது உள்ளபடி கவனிக்க வேண்டுகின்றேன். அதாவது, ஹிந்துவும் முஸ்லிமும் ஒன்றித்துப் போக முடியுமா; ஒரு சமூகமாக வாழ முடியுமா, ஒரு கொடைகீழ் சமாதானத்துடன் இருக்க முடியுமா என்னும் விஷயத்தை நேருக்கு நேராக சந்தித்து சிந்திக்க வேண்டுகின்றேன்.

உங்கள் பாம்பரை வழக்கப்படி, உங்கள் மதக் கோட்பாடு படி நீங்கள் சத்தியத்தை வெற்றி பெறுவதற்கு, காரிய சித்தியாவதற்கு தியாகம் செய்வது சகஜமாய் விட்டது. 'Stoup to Conquer' 'கௌரவ-சத்திய தியாகம் செய்' என்று நீங்கள் காந்தியாருக்கு-சத்தியமும் அஹிம்ஸையும் Truth & Non-Violence மூலக் கொள்கையாக உள்ள மஹா ஆத்துமாவுக்கு உபதேசம் பண்ணினீர்கள். அப்படியே அந்த மஹா ஆத்மாவும் அவ்வப்பொழுது செய்து வருகின்றார்; சமீபத்தில், சத்தியமே அஹிம்சையும் எல்லாமும் என்றுள்ள ஜின்னா ஸாஹிபை தன்வயப் படுத்த, காந்தியார் ஸ்டூப் (Stoup) செய்ய வில்லையா? பஞ்சதந்திரத்தையே அடிப்படையாக்க் கொண்ட நீங்கள் அக்கோர் கான்ஸாஹிபையும், கையூமையும், திவானாவையும், மஜீதையும், இங்கோர் உலமாவையும், ஹக்கையும், லத்தீபையும், பாஜிலையும், கலீபாவையும், அல்லாபிச்சையையும், சையதையும், ஷிபாவையும், மோமினையும், ஆஜாதையும் மிர்ஜாபர்களாக்கி முஸ்லிம்களை ஏமாற்றிவிடலாம் என்று நினைத்திருக்கின்றீர்கள். இந்த வேலைக்காக ஸாப்ரூஜீயைப் பிடித்திருக்கின்றீர்கள் நீங்கள். அரசியல் தகிடுதத்தத்தில் கைதேர்ந்த மஹாத்மாவால் முடியாத காரியம், கூலிக்கு வக்காலத்து வாங்கும் வக்கீல் சாயபால் முடியும் என்பது ஏமாற்றத்தில்தான் முடியும்.

ஆகையால், நீங்கள் சத்தியத்தைக் கடைப்



பிடித்து நடக்க தைரியங் கொள்ள வேண்டுகின்றேன். ஒரு சமூகம் என்றால் ஒரு நேஷன் என்றால் என்ன? ஒரு நிலப்பரப்புக்குள் வசிக்கும் மக்கள் எல்லாம் ஒரு நேஷன் என்று பிடிவாதம் செய்துவந்தது இப்பொழுது தளர்ந்துபோய்விட்டது. முஸ்லிம்களனைவரும் ஹிந்துக்களாக இருந்தவர்கள் தானே; இவர்கள் இரத்தமெல்லாம் ஹிந்து ரத்தம் தானே :என்பதுதான். இப்பொழுது பாக்கிஸ்தான் எதிரிகளின் வாதமாக இருக்கின்றது. இதரர் மறுத்தாலும் நான் என்னவோ ஒப்புக்கொள்ளுகின்றேன். இன்னமும் என், எங்கள், நரம்புகளில் இந்த இரத்தம் இருக்கத்தான் செய்கின்றது என்றதை.

இதனால், முஸ்லிம்களின் நரம்புகளில் இந்த இரத்தம் இருக்கும் காரணத்தால் ஹிந்துவும் முஸ்லிம் ஒரு சமூகம்தான் ஒரு நேஷன் என்று தீர்மானித்து விடக் கூடுமா? 'நேஷன்' என்பதற்கும், பலர் பல பலவிதமாக வியாக்யானம் செய்திருக்கின்றனர், செய்து வருகின்றனர். ஆனால், எல்லாம், மனிதன், பலஹீனன், தீர்க்கதரிசனம் அற்றவன் செய்யும் வியாக்கியானங்களெல்லாம் காலதேச வர்த்தமானத்தை ஒட்டிமாறி வரும் உண்மையை யாரும் மறுக்கமுடியாது.

ஆகையால் Facing Fact. உள்ளதை உள்ளபடி நோக்குவோமானால் ஒரு ஹிந்துவும், அவன் சோதரன் ஒருவன் முஸ்லிமானவுடன் அவனும் ஒரு தாய்ப்பிள்ளையாக நடந்துகொள்ளுகின்றனரா என்பதைப் பரிசீலனை செய்து பார்த்தாலே போதுமானது. வெள்ளையாக விளங்கச்சொல்லி விளக்க வேண்டுமானால், கனம் சாஸ்திரியாரின் இரு குமாரர்களை எடுத்துக்கொள்ளுவோம். என் சிரமம். மஹாத்துமாவின் குழந்தைகளை எடுத்துக்கொள்ளுங்கள். அவர் தன் மகன் ஒருவர் அப்துல்லா காந்தியாக மாறியவுடன் காந்தியாரும், அவர் மனைவியாரும், ஏனைய ஹிந்துக்களும் என்ன செய்தார்கள்? என்ன கிளர்ச்சி செய்தார்கள்! என்ன ஆர்ப்பாட்டம் செய்தார்கள்!! எவ்வளவு விஷமம் செய்தார்கள்!!! இவை நடந்து வெகு காலமாகவில்லை; ஆறேழு வருஷங்கள் தான் ஆயின. இதை நினைத்துக்கொண்டால் 'போதுமானதாகும் ஒரு ஹிந்து, முஸ்லிமானவுடன் என்ன மாறுதல் ஏற்படுகின்றது என்பதை நிரூபிக்க.

இப்படி நேற்று ஹிந்துவாக இருந்து 'லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுரஸூலுல்லாஹ், ஆண்டவன்ஒருவன்; முஹம்மது அவனுடைய தூதர் ஏவலாளர் என்று ஜபித்த மாத்திரத்தில், இன்று அவன் ஒரு ஹிந்துவுக்கு மிலேச்சன்-அயலான்- அருசையானவன், தீயவன் ஆகிவிடுவானானால், அவன் தன் தாய், தந்தை, மனைவி, சோதர சோதரிகளால் வெறுக்கப்பட்டு, துரத்தப்பட்டு பாக்கிஸ்தானில் துலுக்கத் தெருவில் அடைக்கலம்பெற நேரிடுமானால், ஹிந்துவும் முஸ்லிமும் ஒரு சமூகம் என்று நினைத்துக் கொள்ளும்படி முஸ்லிமையும் ஏனைய அறியா அயலாரையும் தூண்டுவதில் ஏதாவது நாணயமிருக்கின்றதா என்று அலசிப் பாருங்கள், நிதானமாக.

நாங்கள் உங்கள் அக்கிரஹாரங்களில் (பிராமணஸ்த்தான்களில்) நடக்க உரிமையில்லாத காலம் இருந்ததை நாங்கள் மறந்து விடவில்லை. இன்றைக்கும் ஆங்காங்கே சில இடங்களில் நான் ஒரு பப்ளிக்-பொது ஜன-சர்க்கார் தெருக்களில் கூட நடக்க உரிமையற்றவனாக இருக்கின்றேன். நான் குடை பிடித்துக்கொண்டோ, செருப்புக் காலுடனோ நடக்க உரிமை பெறாத கிராமங்கள் பல இன்னமும் உண்டு. சிற்றுண்டி-போஜனம் அருந்த லாயக்கில்லாதவனென்று இன்றைக்கும் மதறாஸ் பட்டணத்திலேயே சில ஹோட்டல்களில் எச்சரிக்கைப் பலகைகள் தொங்கக் காண்கின்றேன். என்னை நாயுடனும் குஷ்டரோகியுடனும், பறையனுடனும் சேர்த்துக் கணிக்கும் போர்ட் பலகை உள்ள ஹோட்டல்கள் இன்றைக்கும் கண்டுவருகின்றேன். எல்லாம் மாறிவருகின்றது. நீங்கள் சமாதானம் கூறுவீர்கள்: ஒவ்வோர் ஹிந்து ஹோட்டலிலும் பாக்கிஸ்தான் போர்ட் போட்டிருப்பதை யாரும் ஒப்புக் கொள்ளுவார்கள். கிறிஸ்துவர்களுக்கு, பள்ளு பள்ளி பறையனுக்கு, ஆங்கிலேயனுக்கு, ஆங்கிலோ இந்தியனுக்கு, வெள்ளையனுக்கு, சீக்கியனுக்கு, சீனனுக்கு என்று போர்டுகள் காணமாட்டீர்கள்; ஆனால் 'முஹம்மதியர்களுக்கு' என்றும், 'Maha Mudan' மஹாமூடன் என்று குறும்புத்தனமான போர்டுகள் ஹோட்டல்கள் பெரிய பெரிய நவ நாகரிகத்தில் போட்டி போடும் நகரங்களில் கண்டு வருகின்றோம். முஸ்லிம் ஹோட்டல்களிலும் 'For Hindus' என்ற போர்டுகள் இருக்கக் கண்டு நான் விசாரிக்க ஹிந்துக்கள் சிலர் பஹிரங்கமாகவும், பலர் திருட்டுத் தனமாகவும் வருவதாகவும், அவர்களில் பலர் முஸ்லிம்களுடன் உட்கார்ந்து சாப்பிட விரும்பாமல் தனி இடம் கேட்பதாகவும், அவர்கள் சௌகர்யத்துக்காக தனி இடம் ஏற்படுத்தி போர்ட் போடப்பட்டதாகவும் சமாதானம் சொல்லப் படுகின்றது. இப்படி

# "கணக்குப் பாடம்"

(By : ஜனுப், S. சீனி முஹம்மது)

இக்கதையில் வரும் பெயர்களும், சம்பவங்களும் கற்பனை; தனிப்பட்ட நபர்களை குறிப்பிடுவதல்லை.

"ஷடாப்......'' என்றார் உபாத்தியாயர். அவருடையமுகத்தில் கொந்தளித்துக்கொண்டுவந்த கோபம், பையன்களின் மேல் விழுந்தது.

"ஸார்! அப்துல் சிகரெட் குடித்தான் ஸார்''

"இல்லேஸார்! இஸ்மத்தும் பாவித்தும் பொடி போடறான்கள் ஸார்!''

"ஸார்! ஸார்!! இஸ்மத்து மணியைப்பார்த்து மண்டேலே கல்லெடுத்து வீசிட்டான் ஸார்!''

இப்படியாக 3-ம் கிளாஸில் பயின்றுவரும் மாணவர்கள் ஒவ்வொருவரும், ஸாரிடம் 'ரிப்போர்ட்' கொடுத்தனர். ஸாருடைய கோபத்தைக் கண்ணால் பார்ப்பது அவர்களுக்கு ஓர் குஷி.

ஸாருடைய கண்களிரண்டும் கோவைப் பழம்போல் சிவந்தன. "ஸைலன்ஸ்! மக்குகள்; மக்குகள். காலேயில் ஸ்கூலுக்கு வந்துவிட்டால், ஒவ்வொருவனும் கோள் சொல்ல ஆரம்பிச்சுடறான்கள். பாடம்படிக்கிறதில்லே வீட்டுக்கணக்கு ஒழுங்காச் செய்யறதில்லே மூதேவிகள்'' என்று வீரகர்ஜனை செய்தார் 3-ம் வகுப்பு உபாத்தியார்.

"ஸார்! இன்று பத்துக்கணக்குக் குறையாமல் சொல்லித்தரணும் ஸார்'' என்றான் கணக்கில் ஆர்வமுள்ள இஸ்மத்.

"டேய் பசங்களா! இன்று புத்தப் புதுக் கணக்குள், பத்துவகை சொல்லித்தருவேன். ஒவ்வொரு கணக்கையும் கால்மணி நேரத்திற்குள் செய்துடணும், இல்லாமல் போனல் ஸ்கூல் விடுவது பூஜ்யம்தான், தெரிந்ததா?'' என்றார் ஸார்.

"டண்டண்'' என்று ஸ்கூல் கடிகாரம் பத்து அடித்தது. உபாத்தியாயர் கணக்குப் பாடம் சொல்லிக்கொடுக்கத் தொடங்கினார்:—

ஸார்:—"டேய் எழுதிக்கொள்ளுங்கள், ஒருவன் கடைக்குப்போய் ஐந்தணுவுக்கு... ......''

பாவித்:—"ஸார்! அப்துல் கள்ளக்காப்பி அடிக்கிறான் ஸார்!''

ஸார்:—டேய் வாயை மூடு அதற்குள்ளாகவா கள்ளக்காப்பி அடிப்பான்? சரி எழுதிக்கொள்ளுங்கள். ஐந்தணுவுக்கு வாழைப் பழமும், இரண்டேகாலணுவுக்கு மிளகாயும், பதிஞன்கணுவுக்கு......

அப்துல்:—ஸார் மணி என்னைக் கிள்ளறான் ஸார்...ஆய்...ஊ.........

ஸார்:—டேய் என்ன சத்தம் அங்கே? சும்மா யிருக்கல்லே; வந்தேண்டால் முதுகு

---

(92-ஆம் பக்கத் தொடர்ச்சி)

முஸ்லிம்கள் இந்து ஹோட்டல்களில் தனி இடம் கேட்டதில்லை. ஆனல் அது பரம்பரையாக இந்துக்களாலேயே கொடுக்கப்பட்டு வந்திருக்கின்றது. இதை யாரும் மறுக்க மாட்டார்கள். 950 வருஷங்களாக முஸ்லிம்களுக்கு இந்து ஹோட்டல்களில் நுழையவே அனுமதியின்றி அவர்கள் நாய், குஷ்டரோகி, பறையன், இவர்களுடன் சேர்த்துக் கழிக்கப்பட்டு வந்தார்கள். இந்த 50 வருஷமாகத் தான் பாக்கிஸ்த்தான் தனி இடம் கொடுத்து அனுமதிக்கப்பட்டு வருகின்றான். நாயும், கிறிஸ்தவனும், ஏனையோரும் தாராளமாய் இன்று அனுமதிக்கப்பட்டு வருகின்றார்கள். ஆனல் முஸ்லிமுக்கு மட்டும் தனியிடந்தான்.

இதைவிட ஆதாரங்கள் அவசியமா முஸ்லிமும் இந்துவும் ஒத்துப் போக முடியாது என்று நிரூபிக்க எண்ணிலடங்கா விஷயங்களைக் கொண்டு இந்துவும் முஸ்லிமும் ஒன்றித்துப் போக முடியாது என்று நிரூபிக்கலாம். தூங்குகின்றவனை எழுப்பிவிடலாம். கண்ணை மூடிக் கொண்டு பாசாங்கு செய்பவனை எழுப்புவது வீண் வேலைபாகும்.



தோலையே உரிச்சுடுவேன்......உம் என்ன சொன்னேன்?

இஸ்மத்:—பதிஞன்கணுவுக்கு......

ஸார்:—சரிதான். பதிஞன்கணுவுக்கு சீனியும், பதினெண்ணே முக்காலணுவுக்கு............

மணி:—ஸார்! ஸார்!! உங்க சட்டையிலே வண்டு ஸார்!

(இச்சமயத்தில், ஸார், பெஞ்சியை விட்டும் துள்ளிக் குதித்து, சட்டையைக் கழட்டினர். பதறிப் போய் சட்டையைக் கழட்டியதால் சட்டையில் ஒருபக்கம் கிழிந்தது. பையன்கள் எல்லோரும் 'கொல்' என்று நகைத்தார்கள்.)

ஸார்:—தோசிகள் தோசிகள், யாருடா சிரித்தது? மரியாதையாய்ச் சொல்லிவிடுங்கள். இல்லாவிட்டால் கிளாஸில் உள்ள எல்லோர்களையும் அடிப்பேன். உம்........ என்ன?

இப்ராஹீம்:—ஸார் நான் சொல்லறேன் ஸார், மணி ஒண்ணு...அப்துல் ஒண்ணு வந்து......வந்து.......

மணி:—இல்லே ஸார் நான் சொல்லறேன் ஸார், இப்ராஹீம் ஒண்ணு......லத்தீபு ஒண்ணு...உம்...உம்

இப்ரா:—சும்மா சொல்லறான் ஸார், மணிப்பயல் என்னிடம் நேற்று பட்டாணிக் கடலைக்கேட்டான்; தரமாட்டேன் இன்னேன். அதற்காக கோள் சொல்றான் ஸார்.

(......பிறகு மணியும் இப்ருஹீமும், ஸார் முன்னிலேயில் முஷ்டி யுத்தத்திற்குத்தயாரானர்கள். பையன்கள் எல்லோரும் வேடிக்கை பார்க்க ஆயத்தமாயினர்.)

ஸார்:—"ஸைலன்ஸ், மூதேவிகள், மக்குகள், ஸூவ்வர்கள், எல்லாமண்டுகளும், படிக்கறதுக்கு வந்தூட்டான்கள். இவ்வளவு நேரமாகியும் ஒரு கணக்குக்கூட முடியல்லே,... கரச்சல் பண்ணிண்டேயிருந்தால் என்னத்தெடா படிக்கிறது? சரி என்னடா சொன்னேன்?''......

பாவித்:—ஸைலன்ஸ், மூதேவிகள், மக்குகள் ஸூவ்வர்கள்......என்றீர்கள் ஸார்.

ஸார்:—மடையன் ஒண்ணுந் தெரியல்லே; கணக்குப்பாடத்தில் எந்த இடத்தில் நிறுத்தினேன்? என்றால் என்னமோ உளறிக்கொட்டுறான். புத்தியில்லே......டேய் நீ சொல்லடா?

இஸ்மத்:—"......பதினெண்ணே முக்காலணுவுக்கு........"

ஸார்:—உம் பார்த்தீர்களா! இஸ்மத்தான் படிப்பிலேஊக்கமுள்ளவன்;எல்லாரும் மண்டுகள்...ஒன்றும் தெரியாத முட்டாள்கள் ...

(இச்சமயத்தில் மணி "நானும் இஸ்மத்தும்தான் படிப்பில் கவனமுள்ளவர்கள் என்று ஸார் சொல்கிறார்'' என்று தனக்குப் பக்கத்திலிருந்த அப்துலிடம் சொல்லிக் கொண்டான்.)

---

இப்ரா:—ஸார்! மணிப்பயல் பல்லே உடச்சுடுவேன் ஸார், என்னைப்பத்தி என்னமோ சொல்லரான் ஸார்.

ஸார்:—டேய் மண்டு. வாயை மூடு, அவன் சொன்னது உனக்கு எப்படடா தெரியும்?

இப்ரா:—நான் அவனைத்தான் பார்த்துக் கிட்டே இருக்கேன். உங்கள் கணக்கைக் கூட பார்க்கல்லே ஸார்.

ஸார்:—தடிப்பயல், பாடத்தைக் கவனியாமல் இருந்துவிட்டு, "பாடத்தைக் கவனிக்கல்லே" என்னும் சொல்லிக்கரான். முட்டாள் பயல்......உம் என்னடா சொன்னேன்?.........

இஸ்மத்:—......பதினெண்ணே முக்காலணுவுக்கு.........

ஸார்:—ஆமாமாம்...பதினெண்ணே முக்காலணுவுக்கு, வெங்காயமும், எட்டே காலணுவுக்கு காப்பிக்கொட்டையும்......

லத்தீபு:—ஸார்! கணக்கு எப்போ முடியும் ஸார்? கணக்குப்போட மாச்சலாருக்கு ஸார்.

ஸார்:—சோம்பேரி சோம்பேரி......வாத்தியாரிடம் பயமில்லாமல் பேசரான். எனக்கு ஒத்தரும் மரியாதை வைக்கிறானில்லே. டே அப்துல், லத்தீபு தலேயில் குட்டு...டா......?

அப்துல்:—ஸார்! அவன் ஸ்கூல் விட்டுப் போனதும் என்னை அடிப்பான். ஆதலால் மாட்டவே மாட்டேன் ஸார்.

(ஸாருக்கு வந்த கோபம் மேஜை மீது விழுந்தது. ஆகவே கையை மடக்கி ஓங்கி ஓர் குத்துக் குத்தினர் மேஜைமீது. இதன்பயனாக ......ஸாருடைய விரலில் இரத்தம் வெளியாயிற்று.)

ஸார்:—முட்டாள் பயல்களுக்குப் பாடம் சொல்லிக்கொடுத்தால், கையிலெல்லாம் ரத்தம் வரது. (தலேயில் அடித்துக்கொண்டு ரத்தத்தை துடைக்கிறார்.) ......உம் என்னடா சொன்னேன் மணி.

மணி:—தெரியாது ஸார்.

ஸார்:—போடா மண்டு...நீ சொல்டா இஸ்மத்?

இஸ்மத்:—.........காப்பிக்கொட்டையும் வாங்கிக்கொண்டு கடைக்காரனிடம். ஐந்து ரூபாய் கொடுத்தானேயானல் கடைக்காரன் பாக்கி ரூபாய் எவ்வளவு கொடுக்க......

லத்தீபு:—ஸார் மணியாயிடுத்து ஸார், ஸ்கூல் விடுங்கள் ஸார்......

ஸார்;—டேய் மணி லத்தீபு மண்டையிலே குட்டுடா?

(மணி லத்தீபைக் கொட்டுவதற்கு கையை மடக்கினன்.)

இப்ரா;—டேய் மணி! அவனைக் குட்டினே உன் பல்லைக் காணுமலாக்கிடுவேன் ஜாக்ரதை. யாருக்கும் பயப்படமாட்டேன் தெரியுமா?

மணி.—ஸார்! உங்களுக்கு பயப்படமாட்டானும் ஸார்.

(ஸாருக்கு அசாத்தியமான கோபம் வந்துவிட்டது. ஒருக்காலும் பிள்ளைகளை அடித்திராத ஸார், இப்பொழுது பிரம்பால் ஏழெட்டு அடிகளை பிரயோகம் செய்தார் இப்ராஹீமுக்கு. மணியை பெஞ்சியின்மீது நிற்கச்சொல்லி, ஐந்தாறு அடிகளை வெளுத்து வாங்கினர். மற்ற பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் தலைக்குஇரண்டு அடிகளை விதியாக்கினர்...... கோபத்துக்குப் பரிகாரம் அடிகள்தானே?......பையன்கள் எல்லோரும் பதுமை போலானர்கள்.)

ஸார்.—டேய் இப்ராஹீம்! நீ எனக்குப் பயப்படவேணும். வாத்தியார் என்ற தோணையில் மரியாதையாவது வைக்கப்படாதா? எண்டா தோஷி!

இப்ரா:—(அழுதுகொண்டே) உம் உம்...

ஸார்...உங்களை சொல்லல்லே, மணிப் பயலேத்தான் சொ...ன்...னேன்.

மணி:—ஸார்! ஸார்!! பிறகு உங்களைத் திட்டுவான் அப்போ உங்களண்டை சொல்லறேன் ஸார்.

ஸார்:—டேய் முட்டாள், உதை வாங்கினது உறைக்கல்லே சீ! வாயை மூடுடா! சரி...என்னடா சொன்னேன் பாவித்?

பாவித்:—டேய் மூட்டாள், உதை வாங்கினது......" என்றீர்கள். அதற்குள் மறந்துட்டீளே ஸார்.

ஸார்:—வடிகட்டின முட்டாள், நீதாண்டா இரு உன் கணக்கைப் பார்த்துக்கறேன்; அப்பறம், நீ என்னப்பாடு படறேன்னு பாக்கறேன். என்னடா சொன்னேன் இஸ்மத்?

இஸ்மத்.—பாக்கி ரூபாய் எவ்வளவு கொடுக்க.........

(95ஆம் பக்கம் பார்க்க)



# சத்தியார்த்தப் பிரகாசமா? அசத்தியார்த்தப் பிரசாரமா?

(தூத்துக்குடி எஸ். ஷேய்க் இப்ராஹீம்)

"அல்லாஹ்வையன்றி அவர்கள் வழிபடுபவற்றைப் பழித்தல் வேண்டாம்; ஏனெனில் அவர்கள் வரம்பு கடந்து அறியாமையால் அல்லாஹ்வைப் பழித்தல் கூடும். இவ்வாறு ஒவ்வொரு மானிடருக்கும் தமது செய்கை நேர்மையானதாகத் தோன்றும்படி நாம் செய்திருக்கின்றேம். அப்பால் அவர்களுடைய மீட்சியானது அவர்களது (ரப்) நாயகன் பாற்றுனிருக்கும். ஆதலின் அவர்கள் செய்தவற்றை அவன் அவர்களுக்கு அறிவிப்பான்" (அல் குர் ஆன் 6: 109.)

மேற்கூறிய குர்ஆன் ஷரீபின் திரு வாக்கியமானது பிறமதத்தினரின் மதஉணர்ச்சியை முஸ்லிம்கள் கௌரவிக்கவேண்டுமென்றே அறிவுறுத்துகின்றது. எனவே பிறமதங்களை அனுவசியமாக ஒருவர் தாக்கிப் பேசினல் அதனைத் தடுத்துக் கூறவேண்டியது ஒரு உண்மை முஸ்லீமின் கடமையேயன்றே. இத்தகைய முஸ்லிம் தம் இனிய கொள்கையாம் இஸ்லாத்தைப்பற்றி இனியில்லாவண்ணம் இழித்துக்கூற ஒருவன் முற்படுவனேல் அதனை எங்ஙனம் சகித்துவாளா இருத்தல்கூடும்? எனவேதான் அத்தகைய தாக்குதல்களுக்கு மறுப்பு நூல்களாகவே "துஹ்பதுல் ஹிந்த்" "ரத்துன்னஸாரா" என்ற உர்து நூல்களும் "ஆரியருக்கொரு வெடிகுண்டு", "ஆரிய சமாஜிக்கர்ப் பணம்" போன்ற தமிழ் வெளியீடுகளும் வெளிப்படுத்தவேண்டிய நிர்ப்பந்தம் முஸ்லிம்களுக்கேற்பட்டதென்க.

சின்னட்களாக "சத்தியார்த்தப்பிரகாசம்" என்ற நூலைப்பற்றி ஆரியசமாஜிகள் அதிகம் கிளர்ச்சி செய்துவருவதை பத்திரிகைப் பார்க்கும் நண்பர்கள் நன்கறிவர்.

"சத்தியார்த்தப் பிரகாசம்" என்ற நூலை சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் சுவாமி தயானந்த சரஸ்வதி என்பவர் ஹிந்திபாஷையில் எழுதி வெளியிட்டார். இதை ஆரிய சமாஜிகள் தங்கள் மதக்கிரந்தமெனக் கொள்கின்றனர்கள். உலகத்திலுள்ள சர்வமதங்களையும் ஆராய்ந்து அவைகளில் காணப்படும் உண்மைப் பொருள்களைக் கடைந்தெடுத்து தொகுத்ததே "சத்தியார்த்தப் பிரகாசம்" என்பது அதனை ஆக்கியோரின் அக்கொள்கைகளைப் பின்பற்றும் ஆரியசமாஜிகளின் நம்பிக்கையாகும். ஆனல் ஆரியமே உண்மை வேதமென்றும் மற்றெல்லாம் பொய் மூட்டைகளென்றும் நிரூபிப்பதற்காக பகீரதப் பிரயத்தனத்துடன் எழுதப்பட்டுள்ளது. இதனைப் பார்வையிடும் எவரும் இஃது "பித்தமயக்கத்தில் கூறிய பிணுத்தல்" எனின் அது மிகையாகாது. மற்ற மதங்களைப்பற்றி தயானந்தர் கூறியது ஒருபுறமிருக்க. இஸ்லாத்தைப்பற்றி அவர் வரைந்திருக்கும் ஆபாசப் புன்மொழிகளைக்கண்ட எந்த முஸ்லிமின் உள்ளந்தான் கொதிக்காமலிருத்தல் கூடும். அதை நினைத்தாலே மெய் பதைபதைக்கின்றது. ஆரிய சமாஜிகளுக்கு சுவர்க்கத்தை

(94ஆம் பக்க தொடர்)

ஸார்.—ஆமாமாம்......பாக்கி ரூபாய் எவ்வளவு கொடுக்கவேண்டும்? சரி. டேய் பசங்களா! ஒண்ணுவது கணக்கு எழுதிமுடியவே மூன்றுமணி நேரமாயிடுத்து; பாக்கி ஒன்பது கணக்கை எப்போ எழுதி முடிக்கப் போறேளோ.

பாவித்.—இன்னும் ஒரு நிமிஷத்துக்குள்ளே முடிச்சுடலாம் ஸார்.

ஸார்.—முட்டாள் பயல் சொல்லிட்டாச்சு, போடா மண்டு, டேய்! பசங்களா! மத்தியானம் இக்த கணக்கை பிழை இல்லாமல் செய்துவரணும். யாராகிலும் ஒழுங்கா செய்யாதவன்களை என்ன செய்வேன் தெரியுமா?......

மணி.—இப்ராஹீமை அடிச்சது போல் அடிப்பீர்கள்......

(எல்லாப் பிள்ளைகளும் நகைத்தனர்; ஆனல் நகைப்பின் எதிரொலி ஸாரின் செவிகளில் விழவில்லே. இப்ராஹீம், தனக்கு பொங்கிக் கொண்டுவந்த ஆத்திரத்தை அடக்கிக்கொண்டான், 'கிணிங், கிணிங், என்று மணியடித்தது. எல்லோரும் ஸ்கூல் விட்டு வெளியேறினர்கள்.

ஸ்வீகரித்துக் கொடுப்பான் பொருட்டு சுருக்க வழியைக்கண்டு பிடிக்க யத்தனித்து தயானந்தர் தமது சத்தியார்த்தப் பிரகாசத்தின் பதினான்காவது அத்தியாயத்தின் சுமார் 159 குர் ஆன் ஆயத்துக்களுக்கு அர்த்தத்தையும் தம் சொந்த வியாக்யானத்துடன் கூடிய குறிப்பையும் எழுதித் தீர்த்திருக்கிறார். அதை எழுதவும் கரம் நடுங்குகின்றது. அவசியத்தை யுத்தேசித்து இரண்டொன்றைக் கீழே குறிப்பிடுகின்றேன்.

"குரானில் கூறும் சுவர்க்கம் இந்த உலகத்தைவிட மேலானதாகவில்லை. இந்த உலகில் கிடைக்கக்கூடியது தான் அங்கும் கிடைக்கின்றது. சுவர்க்கத்திலிருக்கும் மாதர்கள் தீர்ப்புதினம் வரையில் எங்ஙனம் காலத்தைக் கழிக்கின்றார்கள். முஹம்மதியக் கடவுள் இம்மாதர்களின் துணையாயிருந்து காலங் கழிக்க உதவுகிறார்போலும். கடவுள் சந்நிதியாகிய சுவர்க்கத்தில் மாதர்களுக்கு மதிப்பு அதிகமாயிருக்கிறது. மாதர்கள் எப்பொழுதும் சுவர்க்கத்தில் இருக்கிறார்கள். மனிதர்கள் மாத்திரம் அங்கு இல்லை. இத்தகைய ஏற்பாடு கடவுள் விருப்பமின்றியிருக்க முடியாது. எனவே முகம்மதியக் கடவுளுக்கு ஸ்திரீகளின் காமவலையில் சிக்கும் ஆபத்திருந்து வருகிறது'

"மனிதன் மாத்திரம் எங்கும் செல்லலாம். பெண்கள் மாத்திரம் வீட்டுக்குள்ளேயே கைதிபோல் அடைத்துக் கிடக்கவேண்டும். இது கொடுமையல்லவா. நல்ல காற்றைச் சுவாசிக்க தோட்டங்களில் நடக்க இயற்கை வனத்தைக்கண்டு அனுபவிக்கப் பெண்களுக்கு ஆசை வாராதா? இதன் காரணமாக முகம்மதியர்கள் வியபசாரத்தில் அதிகமாயிருக்கவேண்டும். எனவேதான் இம்மாதிரி நிபந்தனை ஏற்பட்டிருக்கவேண்டும். மேற்கூறியதிலிருந்து முகம்மது பெருங்கர்மி என்று விளங்குகின்றது. இல்லையேல் தனது மருமகளை (பிள்ளையின் மனைவியை) தனது மனைவியாகக் கொள்வாரா?...தனது மகன் மனைவியை அனுபவிக்க எண்ணிய முகம்மது பெண்கள் கூட்டத்தில் யாரைத்தான் அனுபவிக்க விரும்பார்....இத்தகைய விஷயங்களைக்கொண்ட குர்ஆனை தெய்வநூல் என்றும் முகம்மதை நபி என்றும் குர்ஆனில் கூறப்படும் கடவுளை எல்லாம் வல்ல இறைவன் என்றும் நம்புகின்றவர்கள் முட்டாள்களாகவே இருக்கவேண்டும். அராபியர்கள் ந்த நன்னெறியற்ற (தர்மமற்ற) நூலில் நம்பிக்கை வைத்தது நமக்கு ஆச்சரியத்தை தருகின்றது" சோதரர்காள்! மேலே காணப்படுவது சத்தியார்த்தப் பிரகாசமென்னும் அபத்தக் களஞ்சியத்தில் காணப்படும் இரண்டு உதாரணங்களாகும். இஸ்லாத்தைப் பற்றி எழுதியுள்ள ஏனைய வாக்கியங்கள் இதைவிட மஹா இழிவானதாகவும், நம் சன்மார்க்கத்தையும் நம் உயிரினும் உயர்ந்த நபிகள் பெருமானையும் சகிக்கவொண்ணா முறையில் தாக்கி எழுதப்பட்டுள்ளன. இங்ஙனம் எழுதுவது தான் தர்மநூலாம். இதுதான் ஆரிய சமாஜிகளின் வேதபுத்தகமாம். "நியோகம்" என்ற பகிரங்க விபசாரத்திற்கு தர்ம வேத ஆதாரம் காட்டும் தயானந்தர் பிறமதங்களையும் விபசார 'மயமாய்க் காணுவது ஆச்சரியமல்ல, நாற்பது கோடி பக்தர்களைக் கொண்ட, உலகப் பெருமதங்களில் ஒன்றாய இஸ்லாத்தைப்பற்றி இரத்தம் கொதிக்கும் வண்ணம் தாக்குவது தான் வேத தர்மமா என்பதை மனசாக்ஷியுள்ள ஹிந்து நண்பர்களின் முடிவுக்கே விட்டுவிடுவோம்.

(தொடரும்)



Printed by P. C. Manickavachaga Mudaliar at the Senguntha Mithran Press 33, Armenian Street, G. T., Madras, and Edited and Published by Hafiz A. N. Md. Yusuf (Baqavi), 65, Broadway, G. T., Madras.



The Federal Press, No. 12, Appumaistry Street, G. T. Madras.

Reg No. 4193

## இந்திய தேயிலையின் அபிவிர்த்தி

# இந்தியா அதைத் தனக்கே சொந்த மாக்கிக்கொண்டது



வருஷத்துக்குவருஷம் தேயிலைபழககமுள்ளவர்களின் எண்ணிகை இந்தியாவில் ஜாஸ்தியாகிக்கொண்டேவருகிறது. பத்துகோடிபவுன் தேயிலை வருஷத்துககு சிலவாகிறது. இன்னும் வரவர அந்த அளவு ஜாஸ்தி ஆகிக்கொண்டேவரும். இந்தியாவின் ஜனத்தொகை நாறபதுகோடி. இதனால் தேயிலை உபயோகிப்போரின் எண்ணிககை இன்னும் பெருவாரியாக வளர எவ்வளவு இடமிருக்கிறது! தேசியத்தொழில தேசியபானம் என்று சொல்லத்தக்க தேயிலை பொதுமககள் விருப்பத்திறகு பாத்திரமாகிவிட்டது. இந்தியத் தேயிலையையே குடியுங்கள். உலகத்தில் இதைத்தவிர வேறு நல்ல பானமே கிடையாது.




லாசம்
…ந்தியத்
தேயிலைக் கமிஷனர், இந்தியத் தேயிலை மார்க்கெட்டு விஸ்தரிப்பு போர்டு, தபால்பெட்டி நெ. 2172, கல்கத்தா. மேற்கண்ட விலாசத்துக்கு எழுதினால், "தி மார்ச் ஆப் இந்தியன் டீ" என்ற புத்தகம் உங்களுக்கு இலவசமாக அனுப்பப்படும். அது தேயிலைத் தொழிலைப்பற்றியும் அது எவ்வளவு உன்னதமான பானம் என்பதைப்பற்றியும் வர்ணிக்கும் புத்தகம்.

# இந்தியத் தேயிலை

## உலகத்தின் உன்னத பானம்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

IK-189

